சரசுவதி மகால் வெளியீடு எண். 43

# நம்மாழ்வார் திருத்தாலாட்டு




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்

1990] [விலை ரூ. **10—00**

சரசுவதி மகால் வெளியீடு எண். 43

# நம்மாழ்வார் திருத்தாலாட்டு

*

பதிப்பாசிரியர் :

பண்டித ஸ்ரீ S. **முத்துரத்ன முதலியார்** அவர்கள்

முன்னாள் தமிழ்ப் பண்டிதர், சரசுவதி மகால்.

*




*

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்

1990] [விலை ரூ. **10—00**

# PREFACE

This publication is the biography of NAMMALWAR, the most important of the 12 Alwars of the Vaishnavite school. It is written in the form of தாலாட்டு (Lullaby), a well-recognised literary form. The work, apart from its literary merit, embodies a very deep research into the less-known details in the life of the Great Author of TIRUVAIMOZHI. It is therefore valuable both as a biography composed to be sung in the usual tune of a lullaby and as a very valuable addition to the sources of South Indian History. It contains 350 couplets and the style is simple and attractive.

The author's identity is shrouded in obscurity. But in deep devotion to Nammalwar, he is next only to the great Madhurakavi who attained a place among the Alwars by his matchless devotion to Nammalwar and by his ten famous stanzas glorifying his master.

This work has been edited with a valuable introduction by our Tamil Pandit, Sri S. Muthuratna Mudaliar, with the help of Sri N. S. Devanathachariar, Siromoni, of our Library, who has specialised in the literature of Vaishnava Sampradayam. Our thanks are due to them for their valuable services.

We are grateful to the Government of Madras for their timely grants that have enabled us to publish this and other valuable manuscripts of our Library.

Saraswati Mahal,
Tanjore.
4—5—1951

**S. GOPALAN,**
Honorary Secretary.

# முன்னுரை

வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந் தோர்விரிஞ் சன்முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க குணங்கடந்த
போதக் கடலெங்கள் தென்குரு கூர்ப்புனி தன்கவியோர்
பாதத்தின் முன்செல்லு மேதொல்லு மேதொல்லை மூலப் பரஞ்சுடரே

**தாலாட்டு***

இவ் வெளியீட்டில் "நம்மாழ்வார் திருத்தாலாட்டு" என்னும் அரிய நூல் அடங்கியுளது.

நம் தமிழ் நாட்டினர் யாவருக்கும் தினசரி வாழ்க்கையில் சாதாரணமாகப் பழக்கத்தில் இருந்துவரும் 'நாட்டுப் பாடல்' களில் இத்தாலாட்டுப் பாடல்களும் ஒருவகையாகும்.[1] இது வீட்டுப் பழக்கத்தின் மூலமாகவே தொன்று தொட்டு வளர்ந்துவரும் ஓர் அழியாக் கலையாகும்.

"தாலாட்டு என்னும் இச்சொல்[2] 'தாலு + ஆட்டு என்று பிரிக்கப்பெற்று விவரிக்கப்பட்டுள்ளது. (தாலு—' அண்ணம்) வடமொழியில் 'தோலா' என்னும் சொல் ஒன்று உளது. "ஊஞ்சல்" என்பது அதன் பொருள். அதுவே 'தாலா' என்று மாறி வந்திருத்தல் கூடும், அதை 'ஆட்டு' என்னும் சொல்லுடன் சேர்த்துத் 'தாலாட்டு' என்று வழங்கி வருகின்றனர். என்று பொருள் கூறினும் ஆம்.

---

*அஞ்சன வண்ணனை யாய்ச்சி தாலாட்டிய செஞ்சொல்.
(திவ். பெரியாழ். 1-3-10.)
'தாலாட்டு நலம்பல பாராட்டினார்' (பெரிய புரா. திருஞா. 44.)

1. பிள்ளைத்தமிழின் ஒரு பகுதி என்றும் கூறுவர்.

2. சென்னை சர்வகலாசாலை அகராதி.

இது குழந்தைகளை உறங்குவிப்பதற்காகப் பாடப்படுவதாதலின் குழந்தைகளைப் பார்த்துச் சொல்லப்படும் வார்த்தைகளாலே அமைக்கப்படுவது தொன்றுதொட்டு வழக்கமாக வுள்ளது.

எதையும் இறைவனுக்கு அர்ப்பணமாகவே செய்வதென்பது நம் நாட்டுக் கலாசாரமாகையால், இத்தாலாட்டுப் பாடல்களில் பெரும்பாலானவை எம்பெருமானைப்பற்றியதாகவே அமைந்துள்ளன.

இராமன், ஸ்ரீக்ருஷ்ணன் முதலிய அவதாரங்களில் எம்பெருமானுக்குத் திருத்தாயாராய்த் தோன்றி, அவர்களைப் பாலூட்டி வளர்க்கும் பாக்கியம் வாய்க்கப்பெற்ற-கோசலை, யசோதை முதலியோர் வாய் மொழியாகவே, கவிகளும் பக்தர்களும் தாலாட்டுப் பாடல்களை இயற்றுவதும்—அவைகளையே தாய்மார்கள் உபயோகிப்பதும், நம் நாட்டு வழக்கம்.

தமிழ் மொழிக்கே பெருமைதரும் 4000 திவ்யப்ரபந்தத்திலும் தேவாரம் திருவாசகத்திலும் இத்தாலாட்டு ஓர் பகுதியாக அமைந்துள்ளது. அவற்றிலிருந்து இரண்டொரு பாடல்கள் இங்கு தரப்படுகின்றன :—

## கலித்தாழிசை

*மாணிக்கங் கட்டி வயிர மிடை கட்டி*
*ஆணிப்பொன் னாற்செய்த வண்ணச் சிறுதொட்டில்*
*பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்*
*மாணிக்குறளனே!, தாலேலோ வையமளந்தானே! தாலேலோ.*

(பெரியாழ்.- திரு -முதற்பத்து-4 திருவா.-1 பா.)

## தாவு கொச்சகக் கலிப்பா

*மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே!*
*தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்! செம்பொன்சேர்*
*கன்னிநன்மா மதிள்புடைசூழ் கணபுரத்தென் கருமணியே!*
*என்னுடைய வின்னமுதே இராகவனே ! தாலேலோ*

(முதலாயிரம் பெருமொழி 8 திருவா. 1.)

மேற்கூறிய இரண்டு தாலாட்டுப் பாட்டுக்களும் முறையே பெரியாழ்வாரால் கண்ணபிரானைப்பற்றியும்—குலசேகராழ்வாரால் ஸ்ரீ ராமபிரானைப்பற்றியும் பாடப்பெற்ற தாலாட்டுப் பதிகங்களின் முதற்பாட்டுக்களாகும்.

இவைகளைப்போன்ற கேட்போர் மனதை வசீகரிக்கும் சக்திவாய்ந்த அநேகம் தாலாட்டுப்பாடல்கள் நம் நாட்டில் தொன்றுதொட்டு இருந்து வருகின்றன. நாளிதுவரையில் நம் நாட்டுப் பெண்மணிகளால் காப்பாற்றப்பட்டும் வருகின்றன. அநேகம் தாலாட்டுப் பாடல்கள் கவனிக்கப் படாமல் மறைந்தும் வருகின்றன. அவைகளையெல்லாம் ஆங்காங்கு சென்று, தேடிச் சேர்த்துப்புத்தகமாய் அச்சிட்டு நாடெங்கும் பிரசாரஞ்செய்து காப்பாற்ற வேண்டியதாகிய கடமை நம் நாட்டுத் தமிழ் அன்பர்களை எதிர்நோக்கிக் காத்திருக்கிறது.

தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலயத்துள் பொன்னே போற் பாதுகாக்கப் பெற்றும் ஓலைச்சுவடிகளில் தாலாட்டுப் பிரபந்தங்கள் இரண்டு உண்டு.

அவைகளில் ஒன்று 'இராமாயணத் தாலாட்டு' என்பது இராமாயணக் கதையைச் சுருக்கி 24 கண்ணிகளில் கூறுவது. மற்றொன்று 'நம்மாழ்வார் திருத்தாலாட்டு' என்னும் இவ் வெளியீடாகும்.

இந்நூல்நிலயத்துள் இந்த நூலின் பிரதி ஒன்று உள்ளது. இதில்[1] 350 கண்ணிகள் உள்ளன. அச்சுவடியில் உள்ள ஏடுகள் சில செல்லரித்தும் தலைப்புக்கள் முறிந்து முள்ளன. சில கண்ணிகளில் ஓரடி மட்டு மிருக்கிறது. காப்புச் செய்யுளில்லை. ஒப்பிட்டுப் பார்த்தற்கு வேறு பிரதிகள் கிடைக்காமையால் இருந்த பிரதிகளை வைத்துக்கொண்டு பிழைகளை நீக்கி இருந்தவாறு அச்சிடலாயிற்று. ஆதலின், வழுக்கள் உளவேல் அறிஞர்கள் பொறுத்தருள்வாராக.

---

1 சுவடி எண் 233.

## நூலாசிரியர்

மயர்வற மதிநல மருளப்பெற்றவராய் சர்வலோக க்ஷேமார்த்தமாய் எம்பெருமாளுல் தோற்றுவிக்கப்பட்டவரான நம்மாழ்வாருடைய புண்ணியசரிதத்தைத் தாலாட்டுப் பாடல் வடிவத்தில் சொற்சுவை—பொருட்சுவை மிக்கதோர் நூலாக இயற்றி நமக்குத் தந்தருளிய இந்நூலாசிரியர் இன்னாரென்பது விளங்கவில்லை. இவருடைய ஊர், குலம் முதலியன ஒன்றும் இந்நூலில் யாண்டும் விளக்கப்படவில்லை, திவ்யப் பிரபந்தத்திலும் அதன் அரியவியாக்கியானங்களாகிய 'ஈடு' முதலியவற்றிலும் பெரிதும் ஆராய்ச்சியும், ஆழ்ந்த அநுபவமும் வாய்ந்தவர் என்பது நூலின்போக்கால் விளங்குகின்றது.

## நூலாசிரியரின் காலம்

வைணவ சமயாசாரியர்களுள் முக்கியமானவர்களான, ஸ்ரீமந்நாதமுனிகளையும் எம்பெருமானாரையும் (இராமாநுஜர்) இவர் இந்நூலில் குறிப்பிடுகின்றார். ஆழ்வார்கள் எல்லோரையும் சுட்டியுள்ளார். ஆதலின், மேற்கூறியவர்களுக்கும் பிற்காலத்தவர் இவர் என்பது புலனாகின்றது. 'திருவாய்மொழி' வியாக்கியானங்களின் கருத்தை இவர் தெளிவாக எடுத்துரைக்கின்றார். அதனால், இராமாநுஜருக்குப் பிற்காலத் தவராகிய 'பெரியவாச்சான் பிள்ளை' —நம்பிள்ளை முதலானோர்க்கும் பிற்பட்டவரா யிருத்தல் வேண்டும். அவர்கட்குப் பின்வந்த வைணவாசாரியர்களுள் மிகச்சிறந்து விளங்கிய ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனையோ, அவரது நூல்களையோ இவர் யாண்டும் குறிப்பிடாமையால் அவருக்கு முற்பட்டவர் என்று யூகித்தல் சாத்தியம். ஆதலால் இவருடைய காலம் பதின்மூன்றாவது நூற்றாண்டு எனக்கொள்ளல் தகும்.

## ஆழ்வார் திருநகரியின் சிறப்பு

**"பூழியர்கன் தென்னாடு முத்துடைத்து"** என்று ஔவைப் பிராட்டியாரால் புகழ்ந்து கூறப்பெற்ற பாண்டிநாடு,

தொன்று தொட்டுத் தமிழ் வளர்த்த புண்ணிய நாடாகும். பொருநையாற்றின் தெளிநீர்ப் பெருக்கால் உடலும், மனமும் நிர்மலமாய்த் திகழும் பாக்கியம் பெற்றவர் இந்நாட்டில் வாழும் மாந்தராவர்.

இவ்வாற்றின் கரையில் 'வழுதி நாடு' என்று பிரசித்த மான ஒரு பகுதியில் 'திருக்குருகை' என்பதோர் நகரம் உளது. வேதந் தமிழ் செய்த மாறன் நித்யவாசஞ் செய் யுஞ் சிறப்பினால் இந்நகர்க்கு 'ஆழ்வார் திருநகரி' என்னும் பெயர் வழங்கலாயிற்று. இத்தலத்திற்குக் குருகூர், குருகை எனப் பல்வேறு பெயர்களும் வழங்காநிற்கும். இந்நகர், ஞானப்பிரானாகிய வராகப்பெருமான் ஆலயமும், ஆதி நாதப் பிரான் சந்நிதியும், செந்தமிழ் தேன்றரு ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரம் தந்தருளிய பிரபந்நஜன சந்தான கூடஸ்தராகிய சடகோபர் சந்நிதியும், தன்னகத்தே கொண்டு திகழ்வது.

## நூலின் சிறப்பு

பெரியாழ்வார் — குலசேகராழ்வார் முதலானோர் தங்கள் இஷ்ட தெய்வமாகிய எப்பெருமானைக் குழந்தை யாகவும், தங்களை யசோதை, கோசலை முதலிய தாய் மார்களாகவும் பாவித்துத் தாலாட்டும் பாட்டுக்கள் பாடினர். அங்ஙனமே இந்நூலாசிரியரும் நம்மாழ்வாரிடம் சிறந்த பக்தி பூண்டவராவார். அதனால் நம்மாழ்வாரின் சரித்திரத்தைத் தாலாட்டுக் கண்ணிகளில் எளிய நடையில் இனிய இசையில் அமைத்துப் பாடியுள்ளார். இத்தாலாட்டு பெரும்பான்மையாகப் பெரியாழ்வாரின் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களைத் தழுவியதாகக் காணப்படுகிறது.

இவர் பன்னூற்களையும் நன்றாகக் கற்றுணர்ந்தவர் செந்தமிழ்க் கவிகள் இயற்றுவதில் பேராற்றல் படைத்தவர் இவர் எப்பெருமான் விஷயத்தில் எவ்விதமான கவிகளும் இயற்றியுள்ளதாகத் தெரியவில்லை. எப்பெருமானையும்

புறக்கணிக்குமாறு நம்மாழ்வாரிடம் இவருக்கிருந்த பக்தியின் மேன்மை ;

> "வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த
> மாறன் சடகோபன் வண்குருகூர் ஏறெங்கள்
> வாழ்வா மேன்றேத்தும் மதுரகவியார்"

என்று புகழ்ந்து கூறப்பட்ட ஸ்ரீ மதுரகவியாழ்வாருடைய[1] பக்திக்கு ஒப்பிடத்தக்கது.

இந்நூல் தாலாட்டுக் கண்ணிகளாக வமைந்துள்ளது. ஆயினும் ஏனைய தாலாட்டுப் பாடல்கள்போல் குழந்தையைப் பார்த்துத் தாயார் சொல்லும் மொழியாக வமைக்கப்பெறவில்லை. நம்மாழ்வாருடைய சரித்திரத்தைக் கதா (narrastive) ரூபமாக ஒருவர் சொல்லுகிற முறையில் அமைத்துள்ளது.

மற்ற நூல்களில் ஆழ்வாரின் தந்தையாகிய காரியார் அவருடைய முன்னோர்கள் வரலாற்றைக் கூறும் முறையில் ஆழ்வார் சரித்திரம் தொடங்கி உரைக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்நூலில் ஆழ்வாருடைய திருத்தாயாராகிய உடைய நங்கையாரின் பிறந்தகமாகிய 'திருவண்பரிசாரத்தில்'' அன்னாரின் தந்தையாராகிய 'திருவாழ்மார்பன் என்பவருடைய பெயருடன் ஆழ்வார் சரிதம் தொடங்குகிறது.

இந்நூலாசிரியர் நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய (1) திருவிருத்தம், (2) திருவாசிரியம், (3) பெரிய திருவந்தாதி, (4) திருவாய்மொழி ஆகிய நான்கு பிரபந்தங்களையும், மற்றய ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தங்களையும் சம்ப்ரதாயமான உரைகளுடன் நன்கு கற்றுத் தேர்ந்தவராகையால், மிகவும் பரிபக்குவமடைந்த

---

1 நம்மாழ்வாரின் பெருமைகளை உலகினருக்குக் எடுத்துக் காட்டிய வரும், அன்னாருடைய நற்குணங்களில் நினைத்து அவருக்கு முக்கிய சீடருமானவர்.

இவருடைய கவிதையில் திவ்ய பிரபந்தங்களிலுள்ள சொற்களும், கருத்துக்களும் மலிந்து காணப்படுகின்றன.

இங்கு, இந்நூலில் குறிப்பிட்டுள்ளபடி நம்மாழ்வார் சரிதத்தைச் சுருக்கமாய்க் கூறுவது பொருந்தும்.

> "சீர்பூத்த நீன்மதிகளும் செம்பொன்செய் கோபுரமும்
> கார்பூத்த மாளிகையும் கற்பகக் காவஞ் செறிந்த"

திருவண்பரிசாரம்[1] என்றொரு திருப்பதி உள்ளது. அங்கு அத்தலத்து எம்பெருமானுடைய பெயரையே கொண்ட "திருவாழ்மார்பன்" என்றொரு பெரியார் வாழ்ந்துவந்தார். அன்னாருக்குத் தவப்புதல்வியாக 'உடைய நங்கை' என்னும் பெண் மகவு அவதரித்தது. அக் குழந்தைக்குப் பருவ வயது வந்ததும் திருமணப் பேச்சுக்கள் எழுந்தன. வேளாள குலத்தைச் சார்ந்த திருவழுதி நாட்டரசனுடைய செல்வக் குமாரனான 'காரியார்' என்பவரே இப்பெண்ணரசிக்குத் தகுந்த மணவாளனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சித்திரை மாதத்தில் திருவோண நட்சத்திரங் கூடிய நன்னாளில் ஸ்ரீ உடைய நங்கையருக்கும் காரியாருக்கும் திருமணம் செவ்வனே நடந்தேறியது. பின்பு தக்க மரியாதைகளுடன் மணமகளும் மணமகனும் மணமகனுடைய சொந்த ஊராகிய 'திருக்குருகை[2] என்னும் நகருக்குச் சென்று இன்புற்று வாழ்ந்தனர்.

இல்லற வாழ்க்கையில் நெடுநாட் கழிந்தது. காரியாருக்குப் புத்திர சந்தானம் உண்டாகவில்லை. அதனால்[3] மிகவும் வருத்தமெய்தினர். திருநகரியிலுள்ள எம்பெருமானை வணங்கித் தம் குறையைத் தெரிவித்தனர்.

---

1. இப்பதி திருவிதாங்கூர் சீமையில் உள்ளது. திருநெல்வேலிக்குத்தெற்கில் 40 மைல் தூரமாகும்.

1. திருநெல்வேலிக்குக் கிழக்கே 19 மைல் தூரமுள்ளது.

2. கண்ணி 16 முதல் 21 வரையில் இங்கு நோக்கற்பாலது.

அவ்வமயம் ஆகாய வாணி ஒன்று தோன்றியது. [3] "திருக்குறுங்குடி" க்குச் சென்று அத்தலத்திலுள்ள "நம்பி' யைத் தொழுதால் குழந்தை உதிக்குமென்று திருவருள் பிறந்தது அவ்வாறே அவர்கள் இருவரும் திருக்குறுங்குடிக்குச் சென்று அத்தலத்தே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமானைத் தொழுது தங்கள் குறையைச் சொல்லித் தீர்க்கும்படி வேண்டி அன்றிரவு கோயிலிலேயே தங்கினர். அன்றிரவு கனவில் இருவருக்கும் நம்பிகள் பிரத்யக்ஷமாகி அவர்கள் குறையைப்பற்றி வினவினார். அவர்களும் தங்கட்குற்ற குறையை எடுத்துரைத்தனர்'

அதைக் கேட்ட நம்பி தானே புத்திரனாக வந்த தெரிப்பதாகச் சொல்லித் தேற்றினார். இவர்களும் விழித்தெழுந்து ஒருவருக்கொருவர் தங்கள் கனவைக் கூறிக்கொண்டு மகிழ்ச்சியுடன் வீடெய்தினர்.

சிறிது காலத்தில் உடைய நங்கையார் கருவுற்றனர். பத்துத் திங்கள்கள் கழிந்தன, கலியுகம் பிறந்த 43வது நாள் வைகாசி மாதம் விசாக நட்சத்திரம் கூடிய பௌர்ணமியில் 'நம்மாழ்வார்' திருவவதாரம் செய்தார். பலவிதமான மங்கள வாத்யங்கள் முழங்கின பூமாரி பொழிந்தது. "மருத்துவ மாதர்கள் வந்து பிறந்த குழந்தைக்குச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்தனர். இச்செய்தியைக் காரியார் ஆனந்தக் கடலிலாழ்ந்தனர். சாஸ்திரியமான சடங்குகளனைத்தும் செவ்வனே நடந்தேறின.

---

3. கண்ணி 27 முதல் 37 வரை தாங்கள் புத்திரப்பேறு பெறாததற்குப் பூர்வஜன் மங்களில் என்ன பாவங்கள் செய்தோயோ என்று தங்களை நொந்து கொள்கின்றனர். இராமாயணத்தில் இராமன் கானகம் புகுந்த சமயம் பாதன் கோசலையிடம் செய்யும் சபதங்களைப்போல் இங்கும் பல தர்ம ஸூக்ஷ்மங்கள் விளக்கப்படுகின்றன.

4. திருநெல்வேலிக்குத் தெற்கே 26 மைல் உள்ளது,

5. கண்ணி 55 முதல் 59 வரை. பிறந்த குழந்தைகட்குச் செய்ய வேண்டிய விதிமுறைகள் கூறப்பெற்றுள்ளன.

மிகுதியான தானங்கள் வழங்கப்பெற்றன. பன்னிரண்டாநாள் ஆதிநாதர் கோயிலில் தொட்டிலிட்டனர். குழநதைக்கு "மாறன்[1] " என்று பெயர் சூட்டப்பெற்றது. பின்பு யானைமேல் வைத்து ஊர்வலத்துடன் குழந்தை வீட்டுக்கு அழைத்து வரப்பெற்றது.

திருஷ்டி பரிகாரங்கள் செய்யப்பட்டன. நவரத்தினங்கள். வைத்திழைக்கப்பெற்ற பசும் பொன்னால் செய்ததும் தங்கச் சங்கிலிகள் கட்டப்பெற்றதுமான வெண்ணைச்சிறு தொட்டிலில் மெல்லிய பஞ்சணையில் குழந்தையைக் கிடத்தினர்.

தொட்டிலில் மிகவும் உயர்ந்த அலங்காரங்கள் செய்யுப் பெற்றன. தாலாட்டுப் பாடல்கள் பாடி ஆட்டினர்.[2] பின்பு குழந்தையை எடுத்து நன்கு அலங்கரித்தனர்.[3] தாய் தன் மடியில் வைத்துப் பலவிதமாகச் சீராட்டினாள்.[4] பின்பு இடுப்பில் வைத்துப் பால் கொடுத்தாள். அது வழக்கம் போல் அன்றும் பாலுண்ணவில்லை. பலவந்தமாகப் புகட்டப் பெற்ற பாலும் குழந்தையின் கடைவாய் வழியாக வழிந்து வெளியில் வந்துவிடுகிறது. இவ்வேதனையைத் தாயினால் பொறுக்க முடியவில்லை. அவள் செய்யகூடிய முயற்சிகளை எல்லாம் செய்து பார்த்தும் பயனில்லை. அப்பேதையின் மனம் பதறுகிறது. தெய்வத்தின் அருளால்

---

1. குழந்தைகள் இயல்பாய் அழுவதும், தாய்பால் பருகுவதும், கை கால்களை அசைப்பதும் உண்டு. இக்குழந்தை அவ்விதமில்லாமல் உலக இயற்கைக்கு 'மாறாக' விருந்தது தாய்ப்பால் அருந்துவது, கை கால்களை அசைப்பது, அழுவது, முதலியனவில்லை. இதனால் உடம்பில் எவ்விதமான வாட்டமும் இல்லை. கிடத்தின விடத்திலேயே அசை வின்றிக் கிடக்கும். இக்காரணம்பற்றி 'மாறன்' என்று பெயரிடப் பெற்றது.

2. கண்ணி 74 முதல் 100 வரை, சிறந்த தாலாட்டு,

3. இங்கு (103 முதல் 114 வரை) காணப்படும். குழந்தைகளின் அணிவரிசைகள் சரித்திர ஆராய்ச்சிக்கு உபயோகமானது,

4. கண்ணி 115 முதல் 125 வரை.

வெகுநாட் சென்றபிறகு அருமையாய்த் தோன்றிய செல்வப் புதல்வன், தான் செய்ய வேண்டிய முக்கியமான கடமையை செய்தற்கியலாமையால் பயனற்றுப் போய்விட்டான். தான் ஈன்றெடுத்த குழவியைப் பாலருந்தச் செய்தற்கியலாத பேதை, தாங்க முடியாத வெட்கம். அதற்கு மேற்பட்ட துக்கம், என்ன அபாயம் நேர்ந்து விடுமோ என்னும் அச்சம் என் செய்வாள் பேதை?

குழந்தை என்றால் சாமானியமான குழந்தையா? அந் நாட்டு மன்னனுக்குத் தோன்றிய தவப் புதல்வனன்றோ! அந்நாட்டினரின் வருங்காலத்து அரசனல்லவா? நாட்டி லுள்ள கனதனவான்கள் யாவரும் மற்றையோரும், கூட்டம் கூட்டமாக இடையறாமல் தக்க வெகுமானங்களுடன் காண வருவதும் போவதுமாக விருந்தனர்.

உடையநங்கையார் அவ்விதம் வருகின்ற தாய்மார்கள் எல்லோரையும் பார்த்துக் கேட்கின்றாள். உடைய நங்கையாருக்கு இப்பொழுது புகழ், வெட்கம், துக்கம், அனைத்தும் பறந்துபோய்விட்டன. எவ்விதத்திலாவது தன் செல்வக் குமாரனைக் காப்பாற்றியாகவேண்டும். அதற்காக எதைச் செய்தாலென்ன? தாழ்ந்த குடும்பத்தினர் உயர்ந்த குடும்பத்தினர் என்னும் பேதமற, எல்லோரையும் பரிதாபமான குரலுடன் கேட்டுப் புலம்புகிறாள்.[1]

தவிர்க்கமுடியாத பெரும் சங்கடத்தில் அகப்பட்டுத் தவிக்கும் உடையநங்கையாரின் உள்ளத்தில் தன் சக்தியற்ற நிலைமை நன்கு பிரகாசிக்கின்றது. அதனால் உணர்ச்சியின் அலைகள் ஓய்ந்து மனம் தெளிவடைகிறது. அப்பொழுது உண்மை நிலை தெள்ளென விளங்குகிறது. "இவ்வரச குமாரன் நாட்டு நன்மக்களின் பொதுச் சொத்தல்லவா? மேலும் அரசன் லோக ரக்ஷகனான ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அம்சமல்லவா? இறைவனுக்கும், அந்நாட்டு மக்களுக்கும்

---

1. உடையநங்கையார் புலம்புவது (129- 140 கண்ணிகள்) படிப்பார். உள்ளத்தை உருக்கக்கூடியது.

தனக்கும் இக்குழவியின்பால் சமானமான உரிமையே உள்ளது. அங்ஙனமிருக்கத் தான்மட்டும் அவர்களைப் புறக்கணித்துத் தனி உரிமை பாராட்டிக் கவலைப்படுவது தகாது'' என்று தெளிந்து மிகப் பொருத்தமான வகையில் தன் கவலையை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்கிறாள். இக்கண்ணியில்:-

எங்கள் குடிக்கு மிறையோன்[1] பெருங்குடிக்கும்[2]
உங்கள் குடிக்கு மொருமகவாய்த் தோன்றினான். (கண்ணி-129)

எவருக்கும் ஒன்றும் விளங்கவில்லை. முக்கியமானவர்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு விதமான முடிவுக்கு வந்தனர். ''பால் முதலிய ஆகாரம் ஒன்றும் இன்றியே உடம்பில் எவ்வித வாட்டமுமில்லாத இக்குழந்தை ஏதோ தெய்வப் பிறவியாகத் தோன்றுகிறது. நம்மைப் போன்ற அறிவிலிகளால் இதற்குப் பரிகாரம் கண்டுபிடிக்க இயலாது எதற்கும் திருமாலின் அருளையே நோக்கி வாழும் குடியல்லவா? இப்பொழுதும் அவ்விதமே செய்வோம். இக்குழவியைத் திருமால் தன்கோயிலில் அவர் திருமுன்பே கிடத்திப் பரிகாரங் காண வேண்டும்'' என்றனர். காரியாரும் இதற்கிசைந்தார்.

உடனே குழந்தை தந்தப்பல்லக்கில் எழுந்தருளப் பண்ணப்பெற்றது. பலவிதமான மங்கள வாத்தியங்களுடன் எல்லா அரசாங்க விருதுகளுடன் கோயிலுக்குச் சென்றனர் அங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் **''பொழிந்து நின்றபிரான்''** சந்நிதியில் அவ்வெம்பெருமானை உடையநங்கையாரும் காரியாரும் தரையில் விழுந்து

---

1 வைஷ்ணவர்கள் பிரபன்ன ஜனஸந்தான கூடஸ்தர்' என்று போற்றி வரும் கருத்தையும் இப்பதம் குறிக்கும்.

2 இறையோன் பெருங்குடி-பிராணிகளில் எவ்விதமான ஏற்றத் தாழ்வுமின்றி யாவரும் எளிதில் பேரின்பமெய்தும் சரணாகதி மார்க்கத்தை எடுத்துக் காட்டிய பரந்த நோக்கங்கொண்ட வைஷ்ண குலம். இதன்மூலபுருஷர் நம்மாழ்வார் என்க.

வணங்கினர். குழந்தையும் பல்லக்கினின்றும் எடுத்து வரப் பெற்று. எப்பெருமான் திருமுன்பே நமஸ்காரம் செய்யும் பாவனையில் கிடத்தப்பட்டது. அவ்வமயம் ஒரு பெரும் அதிசயம் நிகழ்ந்தது. **குழந்தை சந்நிதியைப் பிரதக்ஷிணமாய்த் தவழ்ந்து செல்ல வாரம்பித்தது.** எல்லோரும் பிரமித்து நின்றுவிட்டனர். உடையநங்கையாரின் முகங் குளிர்ந்தது.

காரியார் கண்கள் களிகூரக் கண்டு உவப்பெய்தினர். குழந்தை கம்பீரமாகத் தவழ்ந்து செல்லும் அழகை அங்கிருந்தவர்கள் எல்லோரும் பின்தொடர்ந்து கண்டு களித்தனர். அவர்கள் மட்டுமல்ல, நாமும் இத்தாலாட்டுக் கண்ணியின் மூலம் பிரத்யக்ஷமாகவே காணகிறோம்.

"காதசையத் தோளசையக் கையசையத் தாளசையத்
தாதசையப் பூவசையத் தாரசைய மெய்யசைப"

(கண்ணி—151)

மேரு பர்வதம் போன்ற விமானமுடைய கோவிலைச்சுற்றிக் குழந்தை தவழ்ந்து வலம் வந்தது. கோவிலின் பிராகாரத்தில் ஒரு புளிய மரம் உளது. அது ஆதிசேஷனுடைய அவதாரமாகும். அது துவாபர யுகத்திலே ஆனிமாதம் மூல நட்சத்திரத்தில் தோன்றியது. அதன் கீழ்த்தானே தவழ்ந்தோடியது, அங்கு சென்று தென் முகமாய்ப் பதுமாசனத்தில் உட்கார்ந்து, ஆழ்ந்தயோக நிஷ்டையில் அமைந்துவிட்டது. இது வரையில் எல்லாரும் வாளாவிருந்தனர் சற்றுநேரம் கழிந்தது. மீண்டும் குழந்தையை எடுத்தனர். எடுக்க முடியவில்லை. பலரும் முயன்று பார்த்தனர். குழந்தை மலையினும் கனமாக விருந்தது உடையநங்கையார் துயர மேலீட்டால் பலவாறாகப் பகவானை வேண்டினார். எத்தனை வைத்தியர்கள், மந்திரவாதிகள், சோதிடர்கள், வேதாந்திகள், சிற்றரசர்கள் முயன்று பாாத்தும் பயனில்லை. அவரவர்கள் தங்கட்குத் தோன்றிய காரணங்களைச் சொல்லி அகன்றனர்.

"இவர் யாரோ பெரிய ஞானியார். தன்னைப் போன்றவர்கள் வந்தால் பேசுவார். நம்போலவாருடன் கலந்து

பழகமனமிலராய் இம்மாதிரி உளர்போலும்" எனத் தீர்மானித்தனர் யாவரும். குழந்தையைத் தனியே விட்டுப் போக மனம் வராமல் இரவு பகலாய் அப்புளியமரத்தின் கீழே எல்லோரும் தங்கியிருந்து ஆதரவுடன் காப்பாற்றி வந்தனர். இப்படியே ஆண்டுகள் 16 கழிந்தன. ஆழ்வாரது உடல்மட்டும் குறைவின்றி வளர்ந்து வந்தது.

தாம்பிரபர்னி நதியின் கரையில் [1]'திருக்கோளூர்' என்னும் திருப்பதியில் திருவவதாரம் செய்த ஸ்ரீ மதுரகவியார் என்பார் ஒரு அந்தணரிருந்தார். அவர் சகல வேதங்கள் சாத்திரங்கள் இவற்றை நன்கு கற்றுத் தேர்ந்தவர். அவர் தவம் செய்வதற்காகக் கங்கைக் கரைக்குச் சென்றிருந்தார். அவ்விடத்தில் அவருக்குத் தென்திசையில் கோடி சூரியர் உதயமானாற்போல, ஒரு பேரொளி தோன்றியது. அது அவரையன்றி மற்றவர்களுக்குப் புலனாவதில்லை. அன்னார் வியப்புடன் அதன் உண்மையை அறியவேண்டித் தென்றிசை நோக்கிச் சென்றார்.

அவ்வொளியையே வழிகாட்டியாகக்கொண்டு திருக்குருகூர் வந்தனர். இங்கு வந்ததும் அவ்வொளி மறைந்து விட்டது. மிகவும் கலக்கமடைந்த அவர் அங்குள்ளாரைக் கண்டு, 'இவ்வூரில் ஏதேனும் விசேடமுண்டோ' வென வினவினர்.

அவர்கள் ஆழ்வாரின் வரலாற்றைத் தெரிவித்தனர். மதுரகவிகளும் தனக்குத் தோன்றிய பேரொளி இம்மஹானுடையதே என்று நிச்சயித்துக் கோயிலுக்குட் சென்று ஆழ்வாரைத் தரிசிக்கப் போயினர். அங்கிருந்த காரியாரும் மற்றவரும் இவரை வணங்கிப் பலவாறாகப் புகழ்ந்து எப்படியாவது தங்கள் குழந்தையைப் பேசவைக்கவேண்டுமென வேண்டினர்.

---

1. திருநெல்வேலிக்குக் கிழக்கே 20 மைல் தூரத்தில் உள்ளது. (ஆழ்வார் திருநகரிக்கு 1-மைல்.)

அவரும் அவ்விதமே செய்வேனென வாக்களித்தனர். ஆழ்வாரைக் கண்டு உளமகிழ்ந்து பலவாறாகத் துதித்தனர் ஆழ்வாருடைய திருமுகத்தில், அகத்தில் சுடர்விட்டெறியும் ஞானப்பிரவாகத்தின் வேகத்தைக் கண்டார்.

ஆழ்வாருடைய திருமேனியோ பார்த்துச் சகிக்கக்கூடியதாகவில்லை. உடல் முற்றும் உரோமங்கள் வளர்ந்து சடைபோட்டுக்கொண்டிருந்தது. ஊசியும் அச்சடையில் நுழையாது, மழையும், வெயிலும், பனியும் தங்கு தடையின்றி உடலைத் தாக்கிப் பாசிப்பிடித்துப் போயிருந்தது.

*"ஊசி நுழையா வுரோமச் சடை முடியான்*
*பாசி பற்று மேனியினான்."* (கண்ணி 217.)

இவ்வாறு அசைவற்று நீண்ட நாட்களாய்க் கிடந்த நம் ஆழ்வாரைக் கண்டதும் "தாயைக் கண்ட சேயே போல" ஆனந்தக் கூத்தாடி முறைப்படி வணங்கிச் செவியின் அருகில் சென்று **"செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?** என்றொரு கேள்வி கேட்டார். பதினாறு வருடமாய் வாய் திறவாத குழந்தை 'சடக்கென' அதற்கேற்ப பதில் அளித்தது.

**"அத்தைத் தின்று அங்கே கிடக்கும்."**[1] என்று பத்துத் திக்கிலும் கேட்குமாறு குழந்தையின் வாயினின்றும் பதில் வெளிவந்தது. எல்லாரும் ஆச்சரியமுற்றனர். இதற்கென மிகுதியான வெகுமதிகள் மதுரகவியாருக்கு அளிக்கப்பெற்றன. தன் தவத்திற்கு விரோதமென்று கூறி அவர் அவைகளை மறுத்துவிட்டார். காரியார் தன் குழந்தையை மேலும் தாராளமாய்ப் பேசும்படியும், ஆகாரம் உட்கொள்ளும்படியும் செய்விக்க வேண்டினர். ஸ்ரீமதுரகவியார், 'ஆழ்வார்—உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்னும்படி பூர்ண யோக நிஷ்டையில் ஆழ்ந்திருப்பதாகவும், பிள்ளைப்பேறு

1. இக்கேள்வியும் பதிலும் நூலில் கண்ணி 238-ல் விளக்கப் பட்டுள்ளன.

வேண்டித் தவங்கிடந்ததனால் எம்பெருமான் அருளியபடி இவர்களுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தாரென்றும், இவ்வுலக சுகங்களில் சிறிதும் பற்றற்றவரென்றும், எம்பெமான் வேதமுதலிய நூற்கள் மூலம் நல்வழியை உபதேசித்தும், இராமன் கிருஷ்ணன் முதலான அவதாரங்களில் தானே நடத்திக் காண்பித்தும் உலகினர் திருந்தாமையைக் கண்டு, வேதம் முதலிய ஸகலமான தத்துவ நூற்களின் கருத்தைத் தமிழ் மொழியில் எடுத்துரைப்பதற்காகவே இம்மாதிரி அவதாரம் செய்துள்ளாரென்றும், அவர்களுக்கு நன்கு விளக்கிக் கூறினார். அவர்களும் தங்களுக்குக் கனவில் நம்பி "தானே பிள்ளையாய் வந்து தோன்றுவதாக" வரமருளியதை நினைத்து "ஆழ்வார் தங்களுடைய மகன்" என்னும் எண்ணத்தை மாற்றிக்கொண்டு, அவரை வலம் வந்து வணங்கினர். அதுமுதல் ஆழ்வாரைக் காப்பாற்றும் பொறுப்பைத் துணிபுடன் மதுரகவியாரிடம் ஒப்புவித்தனர் மனத்தெளிவுடன் வீடு திரும்பினர்.

மாதத்திற்கொருமுறை கோவிலுக்கு வந்து ஆழ்வாரையும் மதுரகவியாரையும் தரிசனம் செய்து வீடு திரும்புவர். அவ்வாறு இருக்கையில், ஒரு சமயம், எம்பெருமானுடைய பத்து அவதாரங்களையும் தன் உடம்பில் பிரத்யக்ஷமாகத் தெரியும்படி ஆழ்வார் அவர்களுக்கு அருளினார். அவர்களும் அஞ்ஞானம் முழுதும் அறவே நீங்கப்பெற்று, ஆழ்வாருக்குப் பொற்கோயில் கட்டுவித்துப் பலவிதமான பூசனைகள் செய்து பேரின்பமெய்தினர்.

எம்பெருமான் ஆழ்வாரை இப்புவியில் வந்து தோன்றும்படி செய்ததன் லக்ஷியம் பூர்த்தியாகவேண்டிய காலம் வந்தது. ஸ்ரீவைகுண்டநாதன் ஸகலமான பரிவாரங்களுடன் வந்து ஆழ்வாருக்குக் காட்சியளித்தார்' தன் பெருமைகளை உலகினருக்கு விளக்கிப் பாடும்படி திருவுள்ளம்கொண்டார். அவ்விதமே இப்புவியில் பல்வேறு திருப்பதிகளில் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமான்கள் தாங்கள் ஆழ்வாருடைய செஞ்சொற் கவிகளாகிய தேன்பிரவாகத்

தில் மூழ்கி மேன்மையடைய விரும்பினர். அதற்காக அவர்களெல்லோரும் ஒரே காலத்தில் ஆழ்வாருக்குப் பிரத்யக்ஷமாய்க் காட்சியளித்தனர், ஆழ்வார் வீற்றிருந்த புளியமரத்தின் இலைகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவர் பரிவாரங்களுடன வந்தமர்ந்தனர். ஆழ்வாரைப் பார்த்து 'என்னைப் பாடு-என்னைப் பாடு' என்று வேண்டினர்.

"சிலைக்கோல நெற்றித் திருமாது தேள்வர்
இலைக்கோ ரொருவாரா யென்னைப்பா டென்னைப்பா
டென்ன........... (கண்ணி 279.)

இவ்வாறாக ஆழ்வார் வீற்றிருந்த இடம், பரம்—வ்யூஹம்—விபவம்—அர்ச்சாவதாரம்—முதலிய எம்பெருமானுடைய பல்வேறு ஸ்வரூபங்களால் சூழப்பெற்றதாய்த் திகழ்ந்தது. உத்தம சீடரான மதுரகவிகள் ஆழ்வாரை வணங்கி வேதத்தினுட்பொருளை வண்டீங்கவிகளில் அமைத்துப் பாடி உலகை உய்விக்குமாறு வேண்டினார். அப்போது ஆழ்வார் திருவாய் மலர்ந்து அருளியவை நான்கு பிரபந்தங்களாய் அமைந்தன· பக்திசிரத்தையுடன் மதுரகவிகளால் பட்சோலைப்படுத்தப்பட்டன. அவை முறையே திருவிருத்தம் (நூறு பாட்டுக்கள்), திருவாசிரியம் (ஏழு பாட்டுக்கள்), பெரிய திருவந்தாதி (எண்பத்தேழு பாட்டுக்கள்), திருவாய்மொழி (ஆரத்து நூற்றிரண்டு பாட்டுக்கள்,) என வழங்கப்படுவனவாகும்.

ஆழ்வார் அவதரித்ததன் குறிக்கோள் பூர்த்தியடைந்தது. உடனே ஸ்ரீ வைகுண்டநாதன் திருவுளமகிழ்ந்து கருட வாகனத்தில் பிராட்டிமாரோடும் முப்பத்துமுக்கோடி தேவர்களுடனும் தோன்றிக் காட்சியளித்தார்.

ஆழ்வார் தாயைக் கூடின கன்றைப்போல் பக்திமேலிட்டால் பேரானந்தமடைந்து கண்டு களித்தனர்.

இனியும், தன்னை இவ்வுலகில் விட்டுவைத்தல் கூடாதென்று பிராட்டி பேரிலும், எப்பெருமான் பேரிலும் திரு

வாணையிட்டுக் கதறினார். இவையனைத்தையும் கண்ட மதுரகவிகளும் ஆழ்வாரைவிட்டுத்தான் பிரிந்திருக்க முடியாமையைச் சொல்லித் தன்னையும் கூடவே பேரின்ப மெய்துவிக்குமாறு இறைஞ்சினார். தனக்குப் பின் இத் தெய்வீகப் பாடல்களை உலகத்தினருக்கு உபதேசம் செய்து அவர்களைக் கடைத் தேற்றுவிக்கும் பணியை ஏற்குமாறும், அவருடைய இடைப்படியே தானும் அவ் விடத்திலேயே நித்தியமாய் ஸாந்நித்யம் செய்வதாகவும் கடைசியில் அவரையும் பரமபதம் சேர்ப்பிப்பதாகவும் சொல்லி அவ்வரை தேற்றிப் பேரின்பமெய்தினார்.

மதுரகவிகளும அவ்வாறே ஆழ்வாருக்குத் திருக் கோயில் கட்டித் திருவிழாக்களை எல்லாம் குறைவற நடத்தி வந்தார். திருவாய் மொழி ஆயிரத்துடன், முதலாழ்வார்கள் அருளிய மூன்று திருவந்தாதிகளும், பிந்திய ஆழ்வார்களும் அருளிய மற்றப் பிரபந்தங்களும் ஆழ்வாரின் திருவருளால் அன்னாருக்குப் புலனாயின. இவ்விதம் 210 ஆண்டுகள் இப்புவியிலிருந்தபின் வைகுந்தம் புக்கார்.

உடனே இவ்வுலகில் ஒரு பெருமாறுதல் உண்டாயிற்று. இத்தெய்வப் பாடல்களை மக்கள் யாவரும் ஓதவில்லை. இவைகளைச் சொன்னால் அவரவர்களும் ஆழ்வாரைப் போல இறந்து போதல் கூடுமென அச்சமுற்றனர்.

அதனால் நாலாயிரமும் காலக்கிரமத்தில் மறைந்து விட்டது. அப்போது வீரநாராயணபுரம் என்னும் காட்டு மன்னார்கோயில்ல் ஸ்ரீமந் நாதமுனிகள் திருவவதாரம் செய்தார். அவரால், மறைந்துபோன 'நாலாயிரம் திவ்யப்பிரபந்தங்கள்" மீண்டும் கண்டு எடுக்கப்பட்டு உலகில் பிரசாரம் செய்விக்கப் பெற்றன.

ஒருக்கால் திருமாலடியார்கள் குழாத்தில் ஆராவமுதே என்னும் பதிகத்தின் முடிவில் 'ஓர் ஆயிரத்துளிப் பத்தும்' என்றோதப்பட்டதை நாதமுனிகள் கேட்டு அவர்களை

வினவினார். அவர்கள் தங்களுக்கு இப்பதிகமொன்றே தெரியுமென்றனர்.

அவர் நேராக ஆழ்வார்திருநகரிக்குச் சென்று விசாரிக்கலாயினர். அங்கும் ஒன்றுந் தெரியவில்லை, மதுரகவிகளின் சீடர்களில் சிலர் தங்கட்குக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் நம்மாழ்வாரைப்பற்றிய பதிகம் வருமெனக்கூற அதை அன்னாரிடம் கேட்டறிந்தனர்.

அதைத் திருப்புளியமரத்தின் கீழ் நாற்பது நாளில் பன்னிராயிரந்தடவை பயபக்தியுடன் உச்சரித்தால் நம்மாழ்வார் பிரத்யட்சமாவர் என்று அவர்கள் கூறினர். நாதமுனிகளும் அவ்வாறே செய்தனர். நம்மாழ்வார் அவருக்கு பிரத்யட்சமாகி என்ன வேண்டுமெனக்கேட்டார். ஸ்ரீமந் நாதமுனிகளும் திருவாய்மொழி ஆயிரத்துடன் மற்ற ஆழ்வார்கள் அருளிய மூவாயிரமும் உபதேசித்தருளி உலகினரை உய்விக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்.

அவ்வாறே ஆழ்வார் நாலாயிரத்தையும் மற்ற வைணவ சமய ரகஸ்யார்த்தங்களையும் உபதேசித் தருளினார். நாதமுனிகளும் அவற்றைக் கற்று இயலுமிசையும் சேர்த்துப் பாடி உலகில் பிரசாரஞ் செய்து உலகை உய்வித்தனர்.

இந்நூலாசிரியர் இச்சிறு நூலில் நம்மாழ்வார் அருளிய நான்கு பிரபந்தங்களில் கருத்தைப் பொதுவகவும், அவை தம்முள் திருவாய்மொழியின் முழுக்கருத்தைச் சிறப்பாகவும் 282-வது கண்ணி முதல் 300வது கண்ணி வரையில் 19 கண்ணிகள் தெளிவாக எடுத்தரைத்துள்ளார்.

கண்ணி—282 ;

திருவிருத்தத்தில் பிறப்பும்-இறப்பும் ஆகிய சம்சாரத்தில் பிறப்பும்—இறப்பும் ஆகிய. சம்சாரத்தில் இனியும் கிடந்து துன்புறாமல் அருளுமாறு நம்மாழ்வார் இறைவனை வேண்டினார்.

"இந்நின்ற நீர்மை இனியா முறாமை"

(திரு. வி. 1ம் பாட்டு)

"அழுந்தார் பிறப்பாம் பொல்லா வருவினை......
......அன்னல் பொய்ந்நிலத்தே"

(திரு. வி. 100ம் பாட்டு)

இக்கருத்தையே முற்கூறிய கண்ணியில் விளக்கி யுள்ளார்.

கண்ணி—283 :

திருவாசிரியத்தில் சம்சாரத்தினின்றும் விடுபட்ட முக்தர்களும், நித்தியர்களும் நிரந்தரமாய் அனுபவித்து இன்புறுகின்ற தன் திவ்ய ஸ்வரூபத்தைப் பகவான் ஆழ்வாருக்குக் காட்ட அதைப் பூரணமாக அனுபவித்து இனியராகிறார். இதையே இக்கண்ணி விளக்குகிறது.

கண்ணி—284 :

பெரிய திருவந்தாதியில் இப்படி விலக்ஷணமான பகவத் ஸ்வருபத்தை அனுபவித்ததனால், அளவு கடந்த அவா தோன்றியது இதை உடனே தணித்தாலன்றித் தரிக்க முடியாத நிலைமையில் ஆழ்வார் இருந்தார். அதனால் அதற்கேற்பப் பேசியும் நினைத்தும் தன்னை உளராக்கிக் கொள்கிறார். இதனை இக்கண்ணி அறிவிக்கும்.

கண்ணி—285 :

திருவாய்மொழியில், இவருடைய அவா வெல்லாம் தீரும்படி எம்பெருமான் ஆழ்வாரோடு, மற்றவர்களோடு ஒப்புக் கூறாத நிலையில் தானே வந்து கலந்தான். இதனை இக்கண்ணி உணர்த்தும்.

கண்ணிகள் 286 முதல் 290:—

வைணவ சமயத்தினர் அவசியமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய பொருள்கள் ஐந்து. அவை:—

*மிக்க விறைநிலையும் மெய்யா முயிர் நிலையும்*
*தக்க நெறியுந் தடையாகித் — தொக்கியலும்*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்*
*யாழினிசை வேதத் தியல்.*

என்னும் திருவாய்மொழித் தனியன் பாசுரத்தில் சுருங்கக் கூறப்பட்டுள்ளன. இவையே அர்த்த 'பஞ்சகம்' என்று கூறப்படுபவையாகும். எல்லா உபநிஷதங்களிலும், புராணங்களிலும் பகவத் கீதை முதலிய தத்துவ நூற்களிலும், ஆகம நூற்களிலும் இவை விரித்துரைக்கப் பட்டுள்ளன. திருவாய்மொழி முதல் பாசுரத்தில் சுருக்கமாகவும், 1000 பாசுரங்களைக் கொண்டதான திருவாய் மொழிப் பிரபந்தத்தால் விரிவாகவும் இவை விளக்கப் பட்டுள்ளன. இதில் பத்துப் பத்துகள் உள்ளன. (பத்து-என்பது நூறு செய்யுட்களாலான பிரபந்தத்தின் ஒரு பகுதி) இவைகளில் முறையே ஐந்து பொருள்களும் இரண்டிரண்டு பத்துக்களால் விளக்கப்படுகின்றன. என்று முன்னோர் வியாக்கியானங்களில் உரைக்கப்பட்டுள்ளது. இதை இந்நூலாசிரியரும் பொருத்தமாக எடுத் துரைக்கிறார்.

கண்ணி—286 :

மிக்க விறைநிலையும்—பரம்பொருளின் உண்மையான சொரூபம் முதலிரண்டு பத்துக்களில் சொல்லப்பட்டுள்ளது

கண்ணி—287 :

மெய்யா முயிர்நிலையும் — ஜீவாத்மாவின் (உயிரின்) சொரூபம் மூன்று நான்காவது பத்துக்களில் விளக்கப்பட் டுள்ளது.

---

ப்ராப்யஸ்ய ப்ரம்மணோருபம் ப்ராப்துஸ்ச ப்ரத்யகாத்மன:
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்தி விரோதிச"
கவியின் கருத்தை இந்த ஸ்லோகம் விளக்கும்.

கண்ணி—288 :

தக்க நெறியும்:—ஜிவாத்மா எம்பெருமானைப் பெறுவதற்கான உபாயம் ஐந்து—ஆறு பத்துக்களில் கூறப்பட்டுள்ளது.

கண்ணி—289 :

'தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும்:-அப்படிப் பெறுவதற்குத் தடையாயுள்ளவை' ஏழு-எட்டு பத்துக்களில் கூறப்பட்டுள்ளன.

கண்ணி—290 .

வாழ்வினையும்:—மோட்ச சுகத்தின் (பேரின்பத்தின்) நிலைமை ஒன்பது-பத்து, பத்துக்களால் விளக்கப்படுகின்றது.

இதற்கேற்ப ஒவ்வொரு பத்துக்களிலும் ஒவ்வொரு முக்கியமான கருத்துக்களையும் பூர்வாசாரியர்கள் உரைத்துள்ளனர். அவைகளையும் இந்நூலாசிரியர் முறையே (கண்ணி 291 முதல் 300) கூறியுள்ளார். மேலும் நம்மாழ்வாரையும், மற்ற வைணவ சமயாசாரியர்களுள் முக்கியமானவர்களையும் பற்றிய சம்ப்ரதாயமான சரித்திரக் குறிப்புக்களையும் நன்கு உரைத்துள்ளார்.

இந்நூலில் நம்மாழ்வாரைப்பற்றி முந்து நூற்களிற் காணப்பெறாத சில அபூர்வமான உண்மைகளும் கூறப்பட்டுள்ளன.

மதுரகவியாழ்வார் 240 ஆண்டுகள் வரையில் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

ஆழ்வார் பிறந்த பன்னிரண்டாம் நாள் கோவிலில் தொட்டிலிடப்பெற்று மீண்டும் வீட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டதாகவும், அதன் பிறகு மறுபடியும் கோவிலுக்குச் சென்று பகவானை வணங்குகையில் ஆழ்வார் தானாகவே

தவழ்ந்து சந்நிதி பிராகாரத்தை வலம் வந்து புளியமரத்தின் கீழ் அமர்ந்ததாகவும் கூறப்படுகிறது.

வழுதி நாட்டில் துடரிமலை—பொதியமலை இரண்டும் அடங்கியுள்ளனவென்றும் குமரிமுனை வரையில் தெற்கே அந்நாடு பரவியிருந்ததென்றும் கூறப்பட்டுள்ளது.

பக்தர்களுள் சிறந்தவர் நம்மாழ்வார். தமிழ் இலக்கியங்களில் தலைசிறந்தது நம்மாழ்வாரின் திருவாய்மொழி. இம் மஹானுடைய புனிதமான சரித்திரத்தையும், அன்னாருடைய தெய்வீகப் பாடல்களையும் தமிழன்பர்கள் யாவரும் கற்க வேண்டியது இன்றியமையாததாகும். இதுகாறும் அப்பாக்கியம் பெறாதவர் எவரேனுமுளரேல் அவர்களையும் அத்துறையில் உடனே ஈடுபடுமாறு செய்ய இவ்வெளியீடு பெரிதும் பயன்படுமென்று கருதுகின்றோம்.

*தன்னின் மனமகிழ்ந்து தன்னிலே பூரித்து*
*நன்னிலய னாகிநின்ற நாதமுனிகள் வாழி*
*வாழி குருகூரன் வாழிதிருக் கோளூரன்*
*வாழி பெரும்பூதுரன் வாழியென வாழ்ந்தனனே*



## நன்றி உரை

இந்நூல் வெளியிடுங் காலத்து வைணவ சம்பந்தமான முக்கியம் வாய்ந்த குறிப்புக்களைத் தெளியவைத்துதவிய தஞ்சை சரஸ்வதிமகால் வடமொழிவல்ல பண்டித நாவல் பாக்கம் **ஸ்ரீ தேவநாதாசாரியார்** அவர்கட்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சரஸ்வதி மகால் நூல் நிலையம் கௌரவ காரியதரிசி பிரும்மஸ்ரீ S. **கோபாலய்யர் B.A., B.L.** அவர்கள் இந்நூற்கள் வெளியீட்டில் அவ்வப்போது காட்டிவரும் முயற்சி என்றும் பாராட்டற்குரியதாகும்.

சரஸ்வதி மகால் நூல் நிலைய ஆராய்ச்சியாளர் பிரும்மஸ்ரீ **K. வாசுதேவ சாஸ்திரியார் B.A.,** அவர்கள் இந்நூல் வெளியீட்டில் மிக்க ஊக்கங் காட்டி உதவி புரிந்தமைக்கு மிகவும் நன்றி கூறுங் கடப்பாடுடையேன்.

'திருஞான முத்திரை தேசிகன் திருவடிகளே சரணம்.'

| தஞ்சை சரஸ்வதி மகால்<br>நூல் நிலையம்,<br>13—3—51. | S. முத்துரத்ன முதலியார்,<br>பதிப்பாசிரியர். |
|---|---|



# வேண்டுகோள்

கருணையுள்ளம்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்.
17—2—90.

மு. சதாசிவம், எம்.ஏ.,எம்.லிட்.,
இயக்குநர், சரசுவதி மகால் நூலகம்.

ஸ்ரீ

# நம்மாழ்வார் திருத்தாலாட்டு

உயர்வற உயர்நல முடையவன் எவனவன்
மயர்வற மதிநல மருளினன் எவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி எவனவன
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே

## நம்மாழ்வார் துதி

தேன நாமகிழ்த் தொடையலு மவுலியுந்
திருக்கிளர் குழைக்காதும்
கான றாமர்த் திருமுகச் சோதியுங்
கயிரவத்[1] துவர்வாயும்
மோன மாகிய வடிவமு மார்பமு
முத்திரைத் திருக்கையும்
ஞான தேதிகன் சரணதா மரையுமென்
னயனம்விட் டகலாவே.

1 கயிரவம் — ஆம்பல்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம :

# நம்மாழ்வார் திருத்தாலாட்டு

சீர்பூத்த நீண்மதிளுஞ் செம்பொன்செய் கோபுரமும்
கார்பூத்த மாளிகையுங் கற்பகக்கா வுஞ்செறிந்த (1)

திருவண் பரிசாரத் தேவே சனையே
மருவவர விந்தத்தில் வாழ்திருவாழ் மார்பன் (2)

கற்றெடுத்த கல்விக் கடலாளருந் தவத்தாற்
பெற்றெடுத்த பெண்கள் பெருமாளுடைய நங்கை (3)

பருவங்குறித்து நந்தம் பாக்கியத்தாற் றோன்றுந்
திருவின்வடி வுக்கேற்ற செல்வ மணவாளன் (4)

எவனா மெனப்புவன மெல்லாங் குறித்தெடுத்து
நவநா கரிகனிவ னாகுமென நண்ணிச் (5)

சித்திரை மாசத்திற் றிருவோண நன்னாளில்
உத்தமயோ கத்தினல்ல வோரை முகுத்தத்தில் (6)

திருவழுதி நாடுமுற்றுஞ் செங்கோல் செலுத்துந்
திருவழுதி நன்மரபிற் செல்வக் குமாரன் (7)

---

(2) திருவண்பரிசாரம் — திருவிதாங்கூரிலுள்ளதும் நம்மாழ்வாரின் தாயார் பிறந்த இடமுமான திருப்பதிசாரம் என்ற திருமால் தலம். திருவாழ்மார்பன் - உடைய நங்கையாரின் தந்தை

" அரவிந்தம்—தாமரை.

(5) நவநாகரிகன் — புதிய நாகரிகத்தையுடையவன்.

(6) நல்ல வோரை — நல்ல இலக்கினம்.

(7) திருவழுதிநாடு — ஆழ்வார் திருநகர்.

" திருவழுதி நன்மரபில்-திருவழுதி வளநாட்டின் நல்ல குலத்தில்

காரியார் செங்கமலக் கைகொடுத்து மாதுனக்குப்
பாரியா மென்றே பரிவா லளித்தருளிக் (8)

கோசலையும் பார்த்திபர்கள் கோமான் தசரதனும்
நேசமுடன் வாழ்ந்ததுபோ னீடூழி வாழுமென (9)

வாழ்த்தியபின் வேதியரு மாதவத்தோரும் வாழ்த்தப்
பார்த்திபர்கள் வாழ்த்தநல்ல பாவாணர்தாம்வாழ்த்த

நந்தாத தெய்வ நகரை யலங்கரித்து
வந்தார்க ளெல்லாம் வழியெதிரே வந்தேத்த (11)

மாடத் திருக்குருகூர் மாநகரி லெண்டிசையோர்
நாடச் சிறந்துநெடு நாளரசு செய்ததற்பின் (12)

சங்கையார் நன்மரபிற் காரிகையார் கற்புடைய
நங்கையார் செய்ய நளினமுக நோக்கி (13)

மானே ! விலையில்லா மாணிக்கமே ! தெவிட்டாத்
தேனே! வொருவார்த்தை செப்புவதுகேளென்ன (14)

நாடு நகரமு நன்மணியு நல்வளமுந்
தேடும் பொருளுந் திரமாமென விருந்தோம் (15)

---

(8) காரியார்—நம்மாழ்வாரின் தந்தை.
,, பாரி— ,, தாயார்.
(10) பார்த்திபர்—அரசர்.
(11) நந்தாத—கெடாத.
(12) திருக்குருகூர்—ஆழ்வார்திருநகரி.
(13) சங்கையார் நன்மரபில்—சங்கையின் நல்ல குலத்தில்
,, நளினமுகம்—தாமரைமுகம்.
(15) திரம்—(ஸ்திரம்) நிலையாக.

குதலைமொழிக் குணிக்காற் கோகநதச் செவ்வாய்
மதலைகளில்லாத வாழ்வுமொரு வாழ்வாமோ? (16)

புக்கடிசி லுண்டு புறம்புல்கிக் கூத்தாடும்
மக்கண்முகங் காணாத வாழ்வுமொரு வாழ்வாமோ (17)

ஐந்தடக்கி வேண்டு மறங்கோடி செய்தாலும்
மைந்தரைப்பெற் றுய்யார் வாழ்வுமொருவாழ்வாமோ
(18)

மிகப்பே றளித்து விரசை நீராட்டும்
மகப்பே றடையாத வாழ்வுமொரு வாழ்வாமோ? (19)

இத்தனை காலங்களும் தெண்ணினோ மில்லையென
உத்தம னுமுத்தமியு முள்ள மிகவேவாடி (20)

ஈடேற்றிச் சென்மத் திடரேற்றி யந்தாம்
வீடேற்றி வீறளிக்கு மெய்ப்புதல்வன் வேண்டுமெனச்
(21)

சிந்தித்து வாலித் திருநகரி மாமாலை
வந்தித் திறைஞ்ச வளையாழி யெம்பெருமான் (22)

ஆகாய வாணி வடிவாகிக் குறுங்குடியில்
'ஏகித் தெழுங்குழுவி யீவோ' மெனப் பகரக் (23)

---

(16) குதலைமொழி—மழலைச்சொல், கோகந்தம்—தாமரை
(17) அடிசில்—உணவு (சோறு)
" புறம்புல்கி—பின்புறத்தைக் கட்டித் தழுவி
என்குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான்.
(பெரியாழ்வார் திரு. 1—9—1)
(19) ஐந்தடக்கி—ஐந்து புலன்களையும் அடக்கி.
(21) சென்மத்திடர் ஏற்றி — பிறவியாகி கரையைத் தாண்டி.
(22) திருநகரி மாமால்—ஆழ்வார் திருநகரியிலிருக்கும் திருமா
" வளையாழி எம்பெருமான்—சங்கு சக்ரதாரியாகிய விஷ்ணு
(23) ஆகாயவாணி—அசரீரி.
" குறுங்குடி—திருமால் தலம்.

கேட்டபொழு துள்ளக் கிலேசமற நீத்து
வாட்டமொழித் தச்சுதனை வாயார வாழ்த்துதற்கே (24)

தென்குருகை மாநகரஞ் சேர்ந்து தரிசித்துடல
நன்குருகிப் பத்தியண்ண நம்பிகன விற்றோன்றி (25)

எத்திரசம் பத்துமுமக் கீட்டுஞ் சதுர்வேதன்
புத்திரசம் பத்தைப் பொறித்தா னிலையென்ன (26)

அச்சுதா னந்தா! வரிகேசவா! கண்ணா!
மச்சுத பாலனந்தா! வாமனா! மாதவனே! (27)

ஏழுதலை முறையாய் நாங்கள் தொண்ட ராகிநிற்க
வாழுமடி யோங்களுக்கு மக்கட்பே றில்லை (28)

ஊழ்வினை யோ தெய்வ முனதருளும் பொய்யாமோ;
வாழ்வினை யேநல்கு மகவளிக்க லாகாதோ? (29)

முன்செய்த மாதவத்தை மூவரு முடித்திலமோ?
பின்செய்த பெரும்பேறும் பேறாகப் பெற்றிலமோ (30)

கற்றாவுங் கன்றுங் கதறப் பிரித்தோமோ?
பெற்றாரைப் பார்த்துப் பெருமூச் செறிந்தோமோ? (31)

---

(24) கிலேசம்—துன்பம்.

(25) குருகை—ஆழ்வார் திருநகரி

(26) எத்திர சம்பத்து—எவ்வளவு நிலைத்த பொருள்களும்.

(29) ஊழ்வினை யோதெய்வ முனதருளும் பொய்யாமோ. வாழ்வினை யேநல்கு மகவளிக்க லாகாதோ' என்னும் இவ்வடிகள் "ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்' எனக் கூறும் திருவாய்மொழித்தனியன் ஸ்ரீபராசரபட்டர் அருளியதோடு ஒப்பிடற்பாலது.

(31) கற்றா—கன்றையுடைய பசு.

பேதலித்து முற்பிறப்பிற் பிள்ளைப்பால் வார்த்திலமோ?
காதலித்து மைந்தருண்ணுங் கையைப் பிடித்தோமோ? (32)

கற்புடைய மின்னார் கருவை யழித்தோமோ ?
பொற்புடைய பிள்ளைகளைப் போற்றி வளர்த்திலமோ ? (33)

நல்வினை யேதுஞ்செய்யா நாங்க ளொழியாத
வல்வினை மையோ மலடாய்ப் பிறந்தோமோ ? (34)

செங்கோலை விட்டுக் கொடுங்கோல் செலுத்தினமோ ?
வெங்கோப நீத்தார்க்கு வேதனைகள் செய்தோமோ? (35)

ஆறிலொன்று கொள்ளா தவனி புரந்தோமோ ?
ஊரிலன்மர் செய்த வுதவி மறந்தோமோ ? (36)

என்றுவழக் காகவுரைத் தேங்கிப் பரதவித்து
நின்று புலம்பினர் பரநேசத்தா லுள்ளிரங்கி (37)

ஆதிநம்பி கண்ணுக் கணித்தா யெழுந்தருளி
நீதிமைந்த னாமுமக்கு நீரேகு வீரென்று (38)

கண்ணீர் துடைத்துக் கரத்தினாற் றைவந்து
பெண்ணீர் மையினானீர் பேதலியா தேகுமென (39)

வெள்ளையா ழித்துயிலும் வேதாந்த மூர்த்திமையே
பிள்ளையா கப்படைக்கப் பெற்றோமென மகிழ்ந்து. (40)

---

32 பேதலித்து—மனங்குழம்பி (மனம் வேறுபட்டு)

33 பொற்புடைய—அழகுடைய.

34 மலடு—பிள்ளையில்லாதவள்.

35 நீத்தார்—விட்டவர் (துறந்தவர்)

36 ஆறில் ஒன்று—அரசனுக்குரிய ஆறில் ஒருபாகம்.

37 பரதவித்து—இரங்கி. 38 ஆதிநம்பி—மகாவிஷ்ணு.

39 தைவந்து—தடவிக் கொடுத்து.

40 வெள்ளையாழி—திருப்பாற்கடல்,

கண்டாதரிக்க விண்ணோர் காதலிக்கப் பூதலத்தோர்
கொண்டாட மீண்டு குருகாபுரிக் கேகித் (41)

தென்னர் புகழச் சகத்தோர் பணிகேட்ப
மன்னர் வணங்க மறையோர் புடைசூழ (42)

சீர்புகழ வாய்ந்தநாட் டேவி திருவயிற்றிற்
பார்புகழக் கர்ப்பக் குறியைக்காண் பித்ததனால் (43)

அங்கமெங்கும் வெண்பவள மாகவெளு வெளுத்து
கொங்கை வட்டமிட்டுக் குறுங்கண் கறுப்பேறி (44)

மேனிப் பசுநரம்பு மேற்றோன்றும் வேற்றுமுகம்
தானித் தனைக்குமொரு சாட்சிக் குறிகாட்டிப் (45)

பண்டிபெருத் தோரழகு பாவித்து வேர்வைசிந்தி
உண்டிவெறுத் துண்ணா துறக்கம் பெரிதாகி (46)

ஆக்கைவிட்டு மெய்சோர்ந்த யர்வருத்தங் கொண்டுதுளி
நாக்குலர்ந்து தாகித்து நாடாதது நாடிச் (47)

சாலப் புளித்ததுவுந் தண்சுவர்மேற் பூசமண்ணும்
பாலொத்த நீறும் பலகாலமும் மருந்தித் (48)

திங்களீ ரைந்துந் திருவயிறு வாய்த்ததற்பின்
அங்கங் குழைந் தாகமிக நொந்து (49)

வெண்சங் கினமுழங்க வேதியர்பல் லாண்டிசைப்ப
பண்சங்கைப் பட்டமொழி பைந்தொடியார் வாழ்த்தெடுப்ப (50)

தேவரனைவொருந் தேமலர் வாரிச் சொரிய
மூவர் கருணை முகத்தா மரைமலர (51)

---

44 வெண்பவளம்—வெள்ளைப்பவலம்.

46 பண்டி பெருத்து—வயிறு பெருத்து

49 திங்கள் ஈரைந்து—பத்து மாதம்.

சங்கைப்பட்ட மொழி—மரியாதையோடுகூடிய சொல்.

50 பல்லாண்டு—நீடுவாழ்க என்னும் வாழ்த்து.

அரம்பையர் கூத்தாட வணிமுரசந் தானார்ப்ப
 நிரந்தரமுங் கொண்டல் பூமாரி பெய்யப் (52)

பூபாரந்தீரப் புலவோ ரிசை பாடச்
 சீபாடிய முறைத்தோன் சிந்தை செய்யுந்தேவாகி (53)

நாட்டுங் கலியாதி நாற்பத்து மூன்றா நாள்
 வேட்டதிரு வைகாசி வெள்ளியார் பூரணையிற் (54)

திருவிசா கத்துதயஞ் செய்ய மடமானார்
 மருவியே னையனென்றே வாழ்த்திக் குரவையிட்டு(55)

பொற்கலத்தி லேந்திப் புதுமஞ்ச நீராட்டி
 நற்கலையான் மெய்துடைத்து நாபித்தலம் பார்த்துச் (56)

சர்க்கரையுந் தேனுமொன்றாய்ச் சங்கிலிட்டு
 பொற்கொடியார் சேனை புகட்டியுச்சிக் கெண்ணெயிட்டு

நெற்றி பிடித்தமுத்தி நீண்ட பசுங் கைமுறுக்கி
 முற்றுந் தடவி முழந்தா ளிணைநிமிர்த்துச் (58)

சோணை யுருவிச் சுடாமூக்குத் தண்டுருவிக்
 காண வினிய கனிவாய் வசம்பூட்டி (59)

புத்திரனைக் கைகொடுத்த போதுவந்த காரியா
 முத்தமிட்டு பூரண முகத்தா மரைநோக்கு (60)

பூதானங் கோதானம் பூரிதானம் வித்தின்
 மாதானம் பூசுரர்க்கு மாசுரர்க்குந் தான்வழங்கி (61)

---

55 குரவையிட்டு-மகளிர் விசேட காலங்களில் நாவாற் குழறி விடும் மகிழ்ச்சி ஒலி.

59 சோணை—அடிபெருத்த காது.

61 பூரிதானம்—பொன் முதலிய விசேட தானங்கள்.

நன்னிலத்திற் பன்னிரண்டா நாளாதி நாதர்திருச்
சந்நிதியிற் றொட்டிலிலே தக்கோனைக் கொண்டு
வந்து (62)

வீரன் கலைஞான மேதாவி யான்மகிழ
மாறனென நாமம் வழுவாது சாத்தியபின் (63)

ஆனைக் கழுத்தி லலங்கரித்தும் பூந்தேரிற்
சேனைத் தளங்களுடன் செல்வனைக்கொண் டூர்க்கேகிக்

காதலாய்க் காண்போர்கள் கண்ணேறு வாராமல்
ஆதரவாய்க் கற்பூர வாலாத்தி யுங்காட்டி (65)

ஒப்பமிட்ட பொற்றகட்டி லுள்ளும்புறத்து மொன்றாய்ச்
செப்பமிட்ட வச்சிரத்தாற் செய்ததிருத் தொட்டிலுக்கு
(66)

வயிரக் கானாட்டி வைடூரியத்தைச்......... (சேர்த்து)
செயிரறுத்து விட்டமெனச் சேர்வித் ததனூடே (67)

காண்டகு சோதிச்சுடரோன் கற்றைக் கதிர்முழுதும்
பூண்டதென நீண்ட தங்கப் பொற்சங் கிலிநாற்றிச் (68)

சென்றற் குரியபத்திற் சேர்த்தசிறு மெத்தைமேற்
பஞ்சூடு நீலப் படாத்தின் றழுவணையும் (69)

கைக்கொட்டையுஞ் சிவந்த காற்கொட்டையுந் திருத்தி
மெய்க்கொக்க வேழடுக்கு வெண்பட்டு மேல்விரித்து
(70)

சூற்கட்டு மேகத்திற் றோன்றுமுழு ராசிமுத்தின்
மேற்கட்டி கட்டி விடுபூ மழைசிதற (71)

---

63 மேதாவி— ஞான சிரேட்டர்.

65 கண்ணேறு—திருஷ்டி தோடம்.

அந்திநின்று கண்ணுறழித்தாளணி நீறளித்தே.
(தணிகை களவு. 329.)

கண்ணெச்சிற் படாமைக்குக் காி பூசுகிறார். (ஈடு 5-1-2.)

மருக்கொழுந்து விட்சியிரு வாட்சிமுல்லை மல்லிகைப்பூ
...............  ...........

சூழவிதா னத்திஞட் சோதிப்பிழம் பொளிபோல்
வாழப் பரிவாய் மலர்க்கண் மலரவிட்டுப் (73)

பாந்த ளரசன் பணாமகுடப் பார்காக்கும்
சேந்தர் புகழ்ளிளக்குந் தெய்வத் தனிச்சுடாாய் (74)

அங்கண் ணரயார்க்கு மருட்கொழு கொம்பாய்நீதிச்
செங்கண்ணர் தோன்றச் செழித்த வழித்தோன்றலோ !
(75)

கச்சுலவு கோலக் கன தனத்தாற் சீராட்டி
அச்சுத்ரா மச்சுதரென் றாதரிக்குங் கோளரியோ! (76)

வங்கர் கலிங்கர் மகதர் திறையீட்டும்
எங்கள்சக்கர பரணியா ருண்ணரிய போரேறோ ;(77)

கார்க்கழியா வேழக்கட் றூணம் மாறுபட்டோர்
போர்க்கழியாத் தோளாண்மை பூத்ததுகைக்
குன்றமோ ! (78)

மறந்தாங்கிய சமய வாதியரை வென்றே
அறந்தாங்கி யார்போ ரறந்தாங்கு மற்புதமோ ! (79)

ஆழ்வார்க ளொன்பதிம ரறியாமுக் கோறரித்து
வாழ்வார்கள் தொண்டர் வாழப் பிறந்தானோ ! (80;

---

72 இருவாட்சி—செடிவகை (திவ். பெரியாழ், 2—7—10)

73 விதானம்—மேற்கட்டி,

74 பாந்தள்—பாம்பு.

75 பணாமகுடம்—பாம்பின் படமுடி.

77 திறையீட்டும்—அரசர் கப்பம் செலுத்தும்.

78 தூணம்—பற்றுக்கோடு, பசும்பொற்றூணத்து(மணி, 1—48

79 சமயவாதியர்—சமயவாதம் புரிபவர்.

80 முக்கோல்—திரிதண்டம்.

தண்டமிழும் வேதாந்த சாரப் பெரும் பொருளும்
மண்டலமும் விண்டலமும் வாழப் பிறந்தானோ! (81)

திருப்பதி நூற்றெட்டுஞ் செழுந்துளவத் தாமம்
மருப்பதி நூற்றெண்மர்களும் வாழப் பிறந்தானோ!(82)

திருநாளு மாதத் திருநாளுஞ் சான்றோர்
வருநாளு மெந்நாளும் வாழப் பிறந்தானோ ! (83)

தழைவள முஞ் சேணிற் றருவளமு நீங்கா
மருவளமு மெவ்வளமும் வாழப் பிறந்தானோ ! (84)

அண்டமா யண்டத் தடுக்கா யடுக்கழியாப்
பிண்டமா யொன்றாம் பெருந்தகையைச் சொன்னா
ரோ ! (85)

அனலும் விசும்பு மகலிடமுங் காற்றும்
புனலும் பொருவும் புராதனனைச் சொன்னாரோ!(86)

ஆலாகி யாலினடையா யடைகிடந்த
மாலா மெகின வாகனனைச் சொன்னாரோ! (87)

பத்திக்கு வித்தாய்ப் பணித்தடங்காப் பண்ணவனை
முத்திக்கும் வித்தாய் முளைத்தவனைச் சொன்னாரோ
(88)

நல்குரவுஞ் செல்வமுமாய் நரகுஞ் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்புமாம் வித்தகனைச் சொன்னாரோ

---

82 திருப்பதி நூற்றெட்டு—திருமால் திருப்பதிகள் 108
86 அனல்-புனல்—அனல் முதலியன பஞ்சபூதங்களாகும்,
87 அடைகிடந்த—தங்கியிருந்த.
,, எகின வாமனன்—அன்னவாகனத்தையுடைய பிரமன்.
88 வித்து—விதை. பண்ணவன்—மேலோன்.
89 நல்குரவு—வறுமை.
,, இவ்வடியில் 'நல்குரவு' எனத் தொடங்கும் அடிகளிரண்டும்.
''நல்குர வுஞ்செல் வும்நரகுஞ்சு வர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும்விட மும்மமுதமுமாய்!''
திருவாய்மொழி (6—3—1) அடிகளோடு ஒப்புநோக்கற்குரிய தாகும்.
'' வித்தகன்—ஆச்சரியப்படும்பான அறிவை யுடையவன்.

கொங்கார் பொதும்பர்தோறுங் கோகநத வாவிதோறுஞ்
செங்கா லனஞ்சேர் திருவழுதி நாடானோ ! (90)

கால்பாயுஞ் சேற்றுக் கருமேதி யாய்வரிச்
சேல்பாயும் வாவித் திருவழுதி நாடனோ ! (91

முன்னம் பழுத்தபலா முட்புறத்தின் காய்சிதறத்
தென்னம் பழம்வீழ திருவழுதி நாடனோ ! (92)

மஞ்சா லிமுதா வயன் முத்தோ காந்தியெனச்
செஞ்சாலி சூழந் திருவழுதி நாடானோ ! (93)

மூசுவரி வண்டாட முல்லைமுகை விண்டாடுந்
தேசுகுடி கொண்ட திருவழுதி நாடானோ ! (94)

இருகூர் விழியா ரிசைபோகக் கூகை
குருகூரென் றோதுங் குருகைப் பெருமானோ ! (95)

நாலாகலைப் பொருளு நால்வேதமும் பயிலுங்
கோலா கலமாங் குருகைப் பெருமானோ ! (96)

வெஞ்சரத்தாற் புண்படுத்தும் வில்வேடனுங் கொடிய
குஞ்சரமும் போற்றுங் குருகைப் பெருமானோ! (97)

நாடிவலஞ் சூழ்ந்தசங்க ராசனுஞ் சங்குமுனி
கோடிவலஞ் சூழுங் குருகைப் பெருமானே ! (98)

---

90 கொங்கு—வாசனை-தேனுமாய். பொதும்பர்—சோலை, கோகநதம்—செந்தாமரை. கருமேதி—எருமை,

93 செஞ்சாலி—செந்நெல்.

94 தேசுகுடிகொண்ட—அழகு நிறைந்த

96 கோலாகலம்—ஆடம்பரம்,

"கூராரும் மேல்விழியார் கோலாகலங்களெல்லாம்"
(பிரபோ—27—14)

,, நாலாகலை—பலகலைகள்

கருஹூரன் ஞானியார் காசினி வைகுந்தங்
குருகூரென் றோதுங் குருகைப் பெருமானோ ! (99)

சுழிக்குந் துறைநீர்த் துறைதோறு முத்தங்
கொழிக்கும் பொருநைக் குருகைப் பெருமானோ! (100)

என்று தாலாட்டு மிசைக்குருகி நங்கை யெந்தன்
கன்றுமுலை யுண்ணாது காலங் கழிக்குமோ? (101)

ஆவா வெனப்பதறி யள்ளியெடுத் தணைத்துக்
கோவா மணியைக் குறங்கினிடைக் கிடத்தி (102)

---

99 "கருஹூரன் ஞானியார் காசினி வைகுந்தம் குருகூர் என்றோதும்" இவ்வடி, ஆழ்வார்திருநகரியில், தாமிரபர்ணியாற்றின் வடகரையிலிருந்த சித்தர் ஒருவர் இருந்தார். அவர் வளர்த்து வந்த நாயொன்று பகலில் திருநகரிக்குச் சென்று அங்குள்ள எச்சில்களை உண்டு. மாலையில் திரும்பிவருவது வழக்கம். ஒரு நாள் அந்நாய் திருநகரி சென்று மீளுங்கால் ஆற்றின் பெருக்கால் நீரில் அமிழ்ந்து இறக்குந்தறுவாயில் கபாலம் வெடித்து அதன் ஆன்மா வெளிப்பட்டு விமானமேறிச் செல்வதைக்கண்ட யாவரும் சித்தரும் வியப்புற்றனர். இவரைக் 'கருஹூர்த் தேவர் எனக் கருஹூர்ப்புராணம்' கூறும் திருநெல்வேலிப் புராணத்துள் இவர் திருநகரி சென்று வந்த செய்தி கூறப்பட்டுள்ளது. இதனை. கருஹூர்ச் சித்தர் பாடியதாகக் கூறப்படும். பின்வரும் பாவினால் உணர்க :

'வாய்க்குங் குருகைத்திருவீதி யெச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரமபதமளித் தாய்ந்த நாயோடிந்தப்
பேய்க்கு மிடமளித் தாற்பழு தோபெருமான் மகுடஞ்
சாய்க்கும் படிக்குக் கவிபாடும் ஞானத் தமிழ்க் கடலே'

ஆதலின் இக்கதை நிகழ்ச்சியால் 'கருஹூரன் ஞானியார்"
பூலோக வைகுந்தம் திருநகரி எனக் கருதினாராமெனக்
கொள்ளக்கிடப்பது காண்க

(102) குறங்கினிடை—துடையில்

ஏந்திப் பிடித்திருத்தி யேலக்குழல் முடித்திப்
பூந்தோயலுஞ் சூட்டிப் பொற்கொண்டை யுஞ்சாத்திப்

பொன்னிரை சிலைசூழப் பொற்பட்ட முஞ்சாத்தி
மின்னின் கிளைமான வீரபட்ட முஞ்சாத்தி (104)

திருவும் பிறையுந் திகழ்ந்தசுட்டி மீதணிந்து
மருவுங் கொடிநெடிய வள்ளைக்குழை பெருக்கிச் (105)

நீலைக் குதம்பையிட்டுச் சீராக வெண்ணெயிட்டுக்
காலைக் கதிரிற் தனைத்த குணுக்குமிட்டு (106)

வடிந்த குழைக்காதின் மகரக்குழை சாத்திப்
படிந்தரத்தினக் கொப்பணிந்து பச்சைமணிவாளியிட்டு (107)

மூக்குப்பூ விட்டதின்மேன் மூக்குத்தி யுஞ்சாத்தி
நோக்குந் திருக்கழுத்தி னோக்கரிய காறையிட்டு (108)

தாலியு மைப்படையுந் தங்கத்தி னாலணிந்து
மாலிகையுந் தண்டரள மாலிகையுங் கோத்தணிந்து (109)

---

103 ஏலக்குழல்—வாசனையூட்டிய கூந்தல்,

106 குணுக்கு—காதணி (குதம்பை) (பிங்கலம்)

106 குழைக்காது—குண்டலமணிந்தகாது.
மகரக் குழை—மகர வடிவமாகச் செய்த காதணி.

108 காறை—பெண்களும் குழந்தைகளும் கழுத்தில் அணிந்து கொள்ளும், ஒரு வகை அணி.
கழுத்தினிற் காறையொடும்—பொலிந்த விருடீகேசன்.
(திவ். பெரியாழ். 1—8—3.)

தாலியும் ஐம்படை—கழுத்தில் பிள்ளைகள் அணியும் பஞ்சாயுதவுரு அமைந்த அணி.

ஐம்படைத்தாலி—குறுநடைப் புதல்வர்க்கு (மணி7—56.)
ஐம்படைச் சதங்கை சாத்தி (பெரியபு. தடுந். 4.)

109 தாளமாலிகை—முத்துமாலை.

முன்கை முதாரியிட்டு முத்தின் கடகமிட்டு
நன்குபெறு தோள்வளையு நற்பவளமும் புனைந்து (110)

வெள்ளிவளை தந்தவளை வேகடஞ்சேர் செம்பொன்வளை
வொள்ளியதா கக்காத்துக் கொப்பாய்த் தெரிந்தணிந்து (111)

அரைவடமுங் கிண்கிணியு மச்சு மரைநாணும்
நிரைவடமுங் கட்டுவட நீங்காவரைக் கணிந்து (112)

தண்டைசிலம்பு சதங்கை சிறுதாட் கணிந்து
கெண்டைவிழி மையெழுதிக் கீறுதிரு நாமமிட்டு (113)

கட்டாய்த் திருநுதலிற் கத்தூரிக் காப்பெழுதி
பட்டாடை சாத்திப் பனிநீ ரிளிசுற்றி (114)

அப்பா வென்னாருயிரே! யாருயிர்க்கு மாருயிரே!
ஒப்பாரு மிக்காரு மில்லாவொளி விளக்கே! (115)

கண்ணுக் கினியானே! கட்டழகின் மிக்கானே!
பண்ணுக் கினியானே! பாகொழுகுஞ் சர்க்கரையே!

தேனே! மதுரமே! செங்கருப்பந் தீம்பாலே!
மானேர் விழியார் மனமுருக்குங் குஞ்சரமே! (117)

செல்வக் குழவணனே! தேமாம்பழச் சுவையே!
கல்விக் களஞ்சியமே! காமருசீ ரோவியமே! (118)

கிட்டாத் திரவியமே! கேடில்லா மெய்யுணர்வே!
அட்டாங்க யோகத்துக் காணிப் பசும்பொன்னே! (119)

பேறளிக்கும் வித்தகனே! பிள்ளை மாணிக்கமே!
கூறரிய கோகுலமே! கோமேதகத் தெளிவே (120)

நந்தாத கோமளமே! நாடரிய சொற்பொருளே!
சிந்தா மணிவடிவே! தித்திக்குந் தெள்ளமுதே! (121)

---

120 கோகுலம் குயில்—கோகுலமாய்க் கூவுநரும் (பரி. 9. 65)

அல்ல லொழிக்கு மருமைப் பெருமானே!
நல்லதிரு மகனே! நாவீ றுடையானே! (122)

திருவிசா கத்தில்வந்த தெய்வத் தனிச்சுடரே!
சுருதியா ராயுந் துடரிமலை காவலனே! (123)

பொருநைத் துறையானே! பொதியமலை காவலனே!
குருகைப் பெருமானே! குமரித் துறையானே! (124)

செம்மையிலே! நாவிற் றெவிட்டாத முக்கனியே!
அம்மமுண்டு கண்டுயிலா வற்புதனே! யென்றென்றே!

ஒக்கலைமேற் கொண்டுமுலை யூட்டநினைத் தாறுபால்
தக்கபடி முன்னே தரையிற் சிறிநூற்றிச் (126)

கோகநதச் செவ்வாயிற் கொம்மைமுலை யைப்பிடித்து
மாகநகக் கையால் மடுத்திருத்தும் போதினிலே (127)

மைந்தன் கடைவாய் வழியே வழிந்தொழுக
நைந்துபயப் பட்டுமட நல்லார் தமைநோக்கி (128)

எங்கள் குடிக்கு மிறையோன் பெருங்குடிக்கும்
உங்கள் குடிக்கு மொருமகவாய்த் தோன்றினான் (129)

பாலுண்ண வில்லை பசித்தழவோ தானில்லை
மேலுண்பா னென்றால் விழியுந் திறக்கவில்லை (130)

உச்சிக் குழியில்லை யுள்ளங்கால் வேர்க்கவில்லை
அச்சங்கை யுண்டா மரிவையரிங் கேதுமில்லை (131)

---

123 துடரிமலை திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள ஒரு மலை.
மாறன் துடரிவண்பொழிலே (மாறனங். 96, 157)
தீம்புளிக் களாவொடு துடரி முனையின் (புறநா. 177)

126 ஒக்கலை—இடுப்பு. (ஒக்கலை வேண்டியழல் (பழ—290.)
ஒக்கலை மேலிருந்து உன்னையே சுட்டி (திருமொழி 5—4.)

இயக்க மொன்றுங்காணே னிளைத்திளைத்து மூசி
மயக்கம் பெரிதாய் மருண்டிட வுமில்லை (132)

கலையொண்ணாத் திங்களனுதற் கன்னியரே! தாயாரே!
முலையுண்ணாப் பிள்ளைகளை மூவுலகிற்
கண்டதுண்டே? (133)

பெண்கொடியீ! ரமுதுண்ணப் பேதலித்துப் பண்டியெக்கிக்
கண்பிசைந்து வாய்காட்டாக் காதலரைக் கண்ட
துண்டோ? (134)

பெண்ணானீர்! நீங்கள்பெற்ற பிள்ளைகளிற் சனனமுதல்
உண்ணாது பூரிக்கு முத்தமரைக் கண்டதுண்டோ?
(135)

கைகால சையாமற் கண்ணும் விழியாமல்
மெய்வாய் திறவாற வித்தகரைக் கண்டதுண்டோ?
(136)

இருத்தி னாலெட்டுநா ளாகினு மிவ்வண்ணம்
இருக்குங் குழந்தைகளை யிவ்வுலகிற் கண்டதுண்டே?
(137)

எடுத்துக் கிடத்தினால் யான்கிடத்து மவ்வண்ணம்
படுத்திருக்கும் பாலகரைப் பாருலகிற் கண்டதுண்டோ?
(138)

பண்பினுடன் மையெழுதிப் பையத் திரந்துபின்னைக்
கண்டிறவாப் பாலகரைக் காசினியிற் கண்டதுண்டோ?

மறுகியன்னை நின்று மயங்கினாற் சற்றே
குறுமூரல் செய்யுங் குழவியையுங் கண்டதுண்டோ?

---

133 கலையொண்ணாத் திங்கள்—கலைநிரம்பாத பிறைச்
சந்திரன்.

134 பேதலித்து—மனங்குழம்பி.

பண்டி எக்கி—வயிற்றை உள்ளிழுத்தல்.
(எக்கும் வயிறு. திருக்காளத்தி பு. 31—110)

140 குறுமூரல்—புன்சிரிப்பு.

ஈதேது மாயமோ!! வெண்ண முடியாதென்றார்
மாதே! குழந்தையைநா மால்முனம் வைப்போ
மென்றார் (141)

நன்றுரைத்தீ ரீதாதி நாராயணன் செயலே
என்றுரைத்துத் தன்கணவர்க் கிவ்வண்ணஞ்
சொன்னதற்பின் (142)

தண்சுடரோ னென்னவென்னத் தந்தச் சிவிகையின்மேல்
வெண்சுடரோ வென்ன வெழுந்தருளப் பண்ணி
வித்துப் (143)

பல்லியமுஞ் சங்கினமு பம்புமுகின் முழங்க
மெல்லியலா ராலவட்டம் வெண்சா மரையிரட்டப்
(144)

பூசக்கிரவாளப் புவியோர் புடை நிழற்ற
மாசக்கிரவாள வெண்ண வட்டக் குடைநிழற்றச் (145)

சங்கீத மேளஞ் சதிமுறையா கப்பயில
நங்கீதங் கேளுமென நாரதர்யாழ் வாசிப்பக் (146)

கயரதவா சிப்படை மறக்காலாட் படைமிடையச்
சயசய வென்றோதிச் செகவேந்தர் நின்றிறைஞ்ச
(147)

நீலமலை போற்பொலிந்து நின்றபெரு மான்திருமுன்
கோலமலை போற்பொலிந்து கோதிலாப் பாலகனைத்
(148)

---

141 மால்முன்—திருமால் சந்நிதியில்.

143 வன்னத்தந்தச் சிவிகை—நிறம்வாய்ந்த தந்தச் சிவிகை.

147 சயசய—வெற்றிகுறித்த வாழ்த்து மொழி.
(சயசய போற்றி போற்றி—திருவாசகம்.)

,, கய ரத வாசிப்படை—யானை, ரதம், குதிரை முதலிய மூவகைப்படை.

,, காலாட் படை—தரைப்படை.
"கய ரத துரகமாக் கடலன் கவ்வியன்" (கம்பன்-கார்-58.)

தெண்டனிட்டவிட்ட திருத்தாய் முகங் குளிரக்
கண்டுகண்டு காரியார் கண்கள் களிகூரச் (149)

சுற்றத்தார் பின்றொடரத் தொல்புவியோர் பூரிக்கப்
பற்றாதார் கொண்டாடப் பாசுபத ரேத்தெடுப்ப (150)

காதசையத் தோளசையக் கையசையத் தாளசையத்
தாதசையப் பூவசையத் தாரசைய மெய்யசைய (151)

மேருவிமானமெனு மேவியுறை கோயில் சுற்றிப்
பேருகத்தின்சீர்மை பெருகுந் துவா பரத்துள் (152)

ஒருகந்த வாணிமூ லத்திலே யுற்பவித்த
தாருவுர கப்புளிக்கீழ்த் தானே தவழ்ந்தோடித் (153)

தெற்கே முகநோக்கிச் செய்யபது மாசனத்தில்
விற்கேழ் நுதலார் விரகரனலங் கடமாம் (154)

போதத் தளவே புதிது புதிதாகச்
சீதப் புனிதத் திருவுள்ளம் வேரூன்றக் (155)

கண்ணனடிக் கமலங் காமித்து மெஞ்ஞானக்
கண்ணனென வுண்மைக் காமித் திரைதரித்து (156)

நாசிநுனி நோக்கி நாட்டம் பிறழாமால்
மூசியெதி ரோடுபெரு மூச்சு மகத்தடக்கு (157)

மார்வ நிமிர்ந்துதிரு மந்திரமே தாரகமாய்
ஆர்வமுடன் கொப்பூழி லம்புயவா மக்கரத்தை (158)

---

150 பாசுபதர்—சிவனை வழிபடுவோர்.

152 மேருவிமானம்—மேருமலையை நிகர்த்த விமானம்.

158 வாமக்கரம்—இடது கை.

,, திருமந்திரமே தாரகம்—மந்திரமே பிறவியைக் கடப்பதற்கு உதவுவது.

வைத்துயோ கத்திருந்த வாறுதரிசித் துலகோர்
மொய்த்து வழிபட்ட முறைநோக்கி யீராறு (159)

திங்கள்மட்டா யாவிபெற்ற சித்திரம்போற் சிறந்த
மங்கலரூ பத்தினெழில் வாய்த்த சிறுபாலன் (160)

தவழ்ந்த தொன்றும் போதுமெனத் தங்களிலேசொல்லி
யுவந்து வந்துபார்த் துள்ளங் களிப்பாகித் (161)

திருப்புளிக்கீழ் வீற்றிருந்த சேயை யெடுத்தளவிற்
பொருப்பையசைத் தாலுமிந்தப் புத்திரன்வா
ரானென்றே (162)

நங்கைமட மாதுரைக்க நங்காரியார் பரிவாய்
அங்கைகொடு சீரா யணைத்தெடுத்துப் பார்த்ததற்பின்
(163)

மானா ரெடுத்தார் மகவுடையோர் தாமெடுத்தார்
ஆனாத செங்கோ லரசரெலாம் வந்தெடுத்தார் (164)

நானா விதத்தாலு நம்மா லசைபடான்
ஆனாலு மிந்த நாளைக்குந் தானசையான் (165)

என்றெவருங் கூற விரங்கித் தாங்கியவர்
மன்றன் மலர்க்கூந்தன் வடிவுடைய நங்கைமின்னாள்

கைசோர வுள்ளங் கரையக்கண் ணீர்சோர
மெய்சோரக் கால்சோர விம்மல் பொருமலாய் (167)

நோய்விட்டுப் பின்னுமந்த நோயேபிடித் தார்போல
வாய்விட் டழுதரற்ற மாட்டாம லுள்ளடக்கி (168)

அன்றுபோற் போட்ட வணையினிடை யிற்குடவர்
இன்றுதவழ்ந் தோடவைத்த வெம்பெருமானே!
யிரங்காய் (169)

---

163 பரிவாய்—ஆசையாய்.

சாத்திரர்க்குங் காணாத் தாமோதரா விரங்காய்!
வீற்றிருக்கப் பண்ணிவித்த மெய்ப்பரந் தாமாவிரங்
காய்! (170)

அறமே! யிரங்கா யருள்மூர்த்தியே! யிரங்காய்
மறமே! யிரங்கா யவன்தேவதா! யிரங்காய் (171)

விண்ணே! விரங்காய் விதிவலியே! சற்றிரங்காய்
மண்ணே! விரங்காய் மதியாதவா! விரங்காய் (172)

ஆரிரங்கப் போறாரென் றாகுலிக்கு மக்காலம்
பாரிடங்க ளொட்டப் படித்தமந்திர வாதியரும் (173)

பண்டிதருந் தங்கடங்கள் பார்வைக்கு மூலிகைக்குந்
தண்டுத லில்லாது சலித்துத் தடுமாறுஞ் (174)

செய்கைதனிற் பேதித்துச் சிந்தா குலித்துநைந்து
கைதவ மென்பார்சிலவர் காரணமென்பார் சிலவர்
(175)

சேனைமுத லவனென்பார் செய்தவத்தோன் காணென்பார்
ஆனையிடரொழித்த வச்சுதா னந்த னென்பார் (176)

அவ்வவர்க டங்கள் தங்கட் கானபடி சொல்வதெல்லாங்
கவ்வைபெரி தாய்க்கேட்டுக் கான்முளையை விட்டகலா
(177)

திண்ணம் பருணிதர்வந் தெய்தினர் நம் பாக்கியத்தால்
அன்னமுண்ண வாய்பேசா ராதரிக்கம் பண்ணிவித்தால்
(178)

ஆகாதோ வென்றே யனைவோரு மங்குவிட்டுப்
போகாது காத்திருந்து புத்திரனுக் கன்னைமார் (179)

---

175 சிந்தாகுலித்து—மனக்கலக்கமுற்று.
(சிந்தாகுலமுற்று—திருக்கோவை—12.)

176 கவ்வை-துள்பம். 177 பருணிதர்-ஞானபரிபாக
முடையவர்.

தொன்மைப்பருணிதர் தொடுத்தபத்தி நாவருங்கிளவி
(கம்ப-நாட-64)

எவ்வண்ணஞ் சீராட்டி யெவ்வண்ணம் பாராட்டி
எவ்வண்ணம் போற்றுவா ரவ்வண்ணஞ் செய்துவந்தார்

ஆண்டுதொறு மாண்டுதொறு மங்கமவ யவங்கள்
நீண்டு தகைந்து நிரந்தரமும் பூரித்துப் (181)

பரவச மாகிப் பரபத்தி யேபண்ணி
நிரவதிக ஞான நியமநிலை யுண்டாக்கிப் (182)

பேரோசை யன்பாற் பிதிர்ந்தோடக் கொங்கைவிம்மி
வாரோடிகலு மறுக்கமுந்தான் கண்டு கண்டு (183)

மாறா வழுதிகுல வாழ்வே ! மலக்குநா
வீறாப் புலிவேந்தர் வேந்தே ! குருகூரா ! (184)

பொற்காரி யாருனக்குப் பொற்கிழங்கும் பொற்பந்தும்
பொற்காம தேனுவும் பொற்பூவும் வரவிட்டார் (185)

தென்னர் சிறுதேருஞ் சிறுபறையுந் தொட்டிலுஞ்செம்
பொன்னம் மனையும் புதிதாய் வரவிட்டார் (186)

சப்பாணி கொட்டித் தளர்நடையிட் டப்பூச்சி
யெப்போதுங் காட்டி யெமக்கின்பந் தருவாயே ! (187)

திருமஞ் சனமாட்டிச் சிற்றாடையுஞ் சாத்தி
மருமஞ் சரிசூட்ட மாதரார் வந்துநின்றார் (188)

சிற்றில்சிதைத் தழிக்குஞ் சிற்றடியைக் காணவென்றே
சிற்றில் பலகோலித் தெரிவையர்கள் சூழ்ந்துநின்றார்.
(189)

---

182 பரபத்தி-கடவுளைப் பிரத்யட்சமாக்குவதாகிய பத்தியின் முதலாவது நிலை.

,, நிரவதிக ஞானம்—எல்லையற்ற ஞானம்

187 பூச்சி காட்டி—பயங்காட்டி

பூச்சிகாட்டித் திரியும் புத்தி என்ன. (கொண்டல் விடு-86)

வேலையிட்ட கண்ணாருன் மெய்யழகைப் பார்த்தப்பூ
மாலையிட்டுநிற்கு மணக்கோலங் காண வந்தார் (190)

அமரரினு மாற னழகுடையா னென்றே
குமரிருந்த மாதர் மடல் கொண்டெழுதிப் பார்க்கின்றா (191)

உன்கணவ னோமடவீ ருன்னினும் பெண்மைமிக்காம்
என்கணவ னென்றே விகலிமயல் கொண்டுநின்றார் (192)

இளவரசு தேவரீ ருங்களுக்கென்றே......
வளவரசர் கற்ப மலைபோற் குலித்து நின்றார் (193)

பெருவழுதி நாடாளுநர் பிள்ளையில னென்றார்
திருவடி டேகம்புனையத் தேசிக ரெல்லா (194)

ஏதேனு மெண்ணா திருக்கின்றது மியல்போ?
நாதா வெனவுரைத்து நாட்கழிக்குங் காலத்திற் (195)

பொருந்துஞ் சதுர்வேதப் புனிதர் வடிவாகித்
திருந்துவர் பாத்திற் சித்திரையிற் சித்திரை நாள் (196)

கோளுரி லுற்பலித்துக் குற்றமற்ற சிந்தையனாய்
வேளுநர் கலையை விலக்கும் பொருட்டாகக் (197)

கங்கா நதிப் புனலிற் கார்கால முற்படிந்து
வெங்கால் கனிசருகு வெய்யோ னொளிய...... (198)

பஞ்சாக் கினிநடுவே பலகால மும்பழகிப்
பஞ்சாயுதத் தோனை யாதரிக்கு மக்காலம் (199)

தென்பா லொருகோடி செங்கதி ரோனின்......
முன்பாகத் தோற்று முறையிறும்பூ தென்றுணர்ந்து (200)

---

199 பஞ்சாக்கினி—தலம் புரிவேன் தன்னைச் சுற்றிச் திசை நான் கினு மூட்டிய அக்கினி சூரியனும் ஆகிய ஐவகை அக்கினி,

,, பஞ்சாயுதத்தோன்—சங்கு, சக்கரம், கதை, சாரங்கம், கட்கம் என்ற ஐவகை ஆயுதங்களையுடைய திருமால்.

பின்னொருவர் காணாது பேதையேன் கண்ணருகு
மண்ணுவதே தென்றே மலைத்தோ மறியாமல் (201)

நன்றிசெயுந் தண்புனலி னாமுழுகு நம்முகத்தைத்
தென்றிசையை நோக்கித் திருப்பிவிட்ட காரணத்தால் (202)

மண்டலத்தார் செய்ததவம் வந்துவெளிப் பட்டதெனக்
கண்ட கதிரோன் கதிரே வழிகாட்ட (203)

வந்நான் பொருநை வடகரையில் வந்தேற
நந்தாவொளிப் பிழம்பாய் நாடோறுந் தோற்றிநின்ற (204)

செய்யோனை யின்று தரிசிக்கப் பெற்றிலமே !
அய்யகோ ! வென்றே யளவறுக்க மாட்டாமல் (205)

நிற்கும் பொழுதிலந்த நேமிச்சு டர்வேந்தன்
அற்குன்றுங் காந்தி யடங்கியதிவ் வூரிலென (206)

உள்ளத்தி லெண்ணி யுவட்டெறியுஞ் சங்கணிநீர்
வெள்ளத்தி னீராடி மீண்டவ ளவையினில் (207)

இங்குள்ள வற்புதமே தென்றுவினா வும்பொழுதில்
அங்குள்ளோ ரெங்க ளரசன் குலக்குமரன் (208)

வாயுந்திறவான் மலர்க்கண் ணினை நோக்கான்
தாயை முகம்பாரான் தந்தையையும் வாவென்னான். (209)

---

200 இறும்பூது-ஆச்சரியம்.

207 சங்கணி நீர்—ஆழ்வார்திருநகரியில் தாமிரபருணியின் தென்கரை.

"பொருநற் சங்கணி துறைவன்" (திருவாய் 10—3—11)

" உவட்டெறிதல்—பெருக்கெடுத்தல்.

உவட்டெழுந்தொழுகல் (தணிகை)

என்றுதவ ழுப்படித்தா னன்றுமுதல் வீற்றிருந்தான் (210)
ஒன்று மிருப்பி லொழியாது வீற்றிருந்தான்

சேயென்றாற் சேயோ! செழுமணிதான் கொண்டநோய்
பேயென்றாற் பேயுமன்று பேசவரி தாமென்றார் (211)

அன்னாரை நோக்கி யருள்கரந்த சிந்தையனாய்
நன்னாவ லன்புகுமூர் நாதன் மதுரகவி (212)

யானறிய வேண்டுமுங்க ளிறையோன்பாற் சொல்லுமென
மான்பா னொருவன் வந்தா னெனப்பகர (213)

மந்திரிமார் கேட்டும திர்தெதிர்கொண் டங்கேகி
முந்தி வணங்கி முனிப்பெருமா னேயிந்த (214)

மதலைமொழி பேசினால் வையகமெல் லாமுனக்கு
முதலரசு நல்கு முயற்சியிடு வாயென்ற (215)

வார்த்தைகேட் டுப்பொறுக்க மாட்டாதா னேமகவைப்
பார்த்தவரின் மிக்காய்ப் படித்தவன்போற்
றோன்றுவதோ? (216)

ஊசிநுழையா வுரோமச் சடை முடியான்
பாசிபற்று மேனியினான் பார்க்குந் தொழிலறிய (217)

வல்லவனோடு வென்றிகழ மன்னன் றனைக்கேட்க
நல்லவ னங்கேக நவிலுமென விடுத்த (218)

ஒண்டொடியார் பின்னேகும் யோகிமுக நோக்கி
அண்டர்குரு வே! யெங்க ளாவியைந்தன் பேசினால்
(219)

யாமுமக்குத் தொண்டுசெய்வோ மென்றுரைத்த போது
தக்கோன்
கோமுதல்வ ரோடும்போய்க் கோயிற் புறமாக (220)

---

219 ஒண்டொடியார். ஒண்டொடியார் திருமகளும். (திருவாய் 9-10)

நின்றா னிவன்வார்த்தை நீர்கேட்சுப் பண்ணிவைப்பேன்
என்றே வருங்கூற வெல்லோரும் பின்னடையப் (221)

பாகார்ந்த செஞ்சொற் பராங்குச மாமுனிவன்
ஏகாந்த யோகத் திருந்தசெய னோக்கு (222)

இச்சோதி யோ ! வென் னிதய முருக்கியது
முச்சோ தியினு முழுச்சோதி யொன்றிறைஞ்சி (223)

ஆடியா டிப்பாடி யங்கோடி யிங்கோடி
நாடிநாடிப் பார்த்து நங்கைபெறும் பேறோ ! (224)

வானத்தவர் பேறோ ! மாநிலத்துள் ளார்பேறோ !
ஞானத்தவர் பேறோ ! நன்னாவலர் பேறோ ! (225)

என்பேறா மென்பதற்கு மெதுவுமிப் போதுளவால்
அன்பேறு மென்புருகு மாதரவு மிக்காகும் (226)

அங்கம் புளகமெழு மானந்த வாரியெழும்
துங்கமுக மலருஞ் சுந்தரத்தோள் பூரிக்கும் (227)

சென்றாடுந் தீர்த்தமெதிர் வந்தாடப் பெற்றதே
என்றாயிரந் தரமா யிச்சைப்படி யியம்பப் (228)

---

**222** பாகார்ந்த செஞ்சொற் பராங்குச மாமுனிவன்
**"செஞ்சொற் கவிகாள் ! உயர்கரத்தாட் செய்ம்மின்"**
**(திருவாய். 10-7-1.)**
செஞ்சொல்
**"செஞ்சொற் கவி"—ஆழ்வாரடி.**

**223 'இச்சோதி'**
"முடிச்சோதி யாயுனது முகச்சோதி கலந்ததுவோர் திரு"
இச்சோதி முடிச்சோதி ஆழ்வார்.

**224 'ஆடியாடிப்பாடி'**
**ஆடிஆடி யகங்கரைந்து—இசை**
**பாடிப்பாடிக் கண்ணீர் மல்கி—எங்கும்**
**நாடிநாடி நரசிங்கா ! வென்று**
**வாடி வாடும் மிவ்வாணுதலே. (திரு. 2-4-1)**

பித்தேறி னர்போலும் பேதலித்துப் பால்மறந்து
கொத்தேறு பூவுங் குழையும் பறித்தெறிந்து (229)

தன்னைப் புகழ்ந்து தனைத்தானே பூசித்துப்
பின்னைத் தெளிந்து பிழைத்தே னெனப்போற்றி(230)

கரியதிரு மேனியெங்கே? கைநான் கிரண்டெங்கே?
பெரியதிரு வுந்திமலர் பெற்ற பிரமனெங்கே? (231)

பாகத்தில் வாழும் பரசுதரித் தோனெங்கே?
ஆகத்தில்வாழு மலர்மென் மடந்தை யெங்கே? (232)

அண்டமுண்ட செவ்வா யரவிந்தப் போதிதுவோ?
பண்டகில மேழும் பரந்தளந்த தாளிதுவோ? (233)

ஆலந் தளிரி லடங்கும் வடிவிதுமோ?
சீலம் பலவுந் தெரிந்துணரக் கூடுமோ? (234)

குன்றே! மாயே! குளிர்புனலே! காமினெனத்
தன்றாயை நோக்குந் தனிக்கன்று போன்மகிழ்ந்து(235)

நிலைவணங்கி மெய்யொடுக்கு நீதி நெறியாகத்
தலைவணக்கிக் கையொடுக்கித் தாழ்ந்து முறை
தப்பாமல் (236)

வாய்புதைத்துத் தூசொதுக்கி வந்துதனை யாட்கொண்ட
சேயுகக்கு மாறுதிருச் செவியி லோர்வசனம் (237)

---

233 அண்டமுண்ட செவ்வாய்—உலகமுண்ட பெருவாய்

"தானே யுலகெல்லாம்
தானே படைத் திடந்து
தானே யுண்டுமிழந்து
தானே யாள்வானே"
"பாலனா யேழுல குண்டு" (திருவாய் 4-2-1.)

234 ஆலந்தளிரில்—ஆலிலையில்.

"செத்தத்தி னில்வயிற்றிற் சிறியபொருள் கிடந்தால்
எத்தைத்தின் றேங்கே கிடக்கு" மென வெங்கோமான்
(238)

"அத்தைத்தின் றங்கே கிடக்கு" மெனு மவ்வார்த்தை
பத்துத்திக் குங்கேட்கப் பார்த்திபர்க ளோலமிட்டுப்
(239)

புத்திரனைப் பேசுவித்த புண்ணியனே! யென்றவர்க்குப்
பத்திபத்தி யாகப் பணித்துகிலுஞ் செம்பொன்னும்
(240)

மலைபோற் குவித்து மன்னர் மண்டலீகர் முதலோர்
கலையார்ந்த தண்புழுகு கத்தூரி கற்பூரம் (241)

எண்ணெய்மஞ்ச ணீர்களப மேலச்செழும் பனிநீர்
வெண்ணெய்தயிர் பாலறுநெய் வீதிதொறும் பெருக்கி
(242)

ஆறிரண்டு நாட்களியாட் டாடிக் களிகூர்ந்து
வேறிரண்ட கண்ணாரும் வேந்தர் வேறுள்ளாரும்
(243)

தென்பா லுதித்த தினகரனைக் கண்டோனே!
அன்பாக யாங்க ளளித்த திரவியத்தைக் (244)

கைக்கொள்ளா தேவெறுத்த காரணத்தைச் சொல்லுமென
மெய்க்கொண்ட மாதவத்தை வேட்ட நமக் கெளி
தென்று (245)

கூறியபி னுங்கள் குலதரும மீதென்றால்
ஆறியசிற் றத்தாய டியோங்கு மவிதன்னை (246)

---

238 செத்தத்தின் வயிற்றில்—உயிரற்றதாகிய பிரகிருதியினா(லாகிய உடம்பில்

சிறிய பொருள்—அணுவடிவினதாகிய ஆன்மா
கிடந்தால்—வந்து தோன்றினால்
எத்தைத் தின்று—எதனை அனுபவித்துக்கொண்டு
அத்தைத் தின்று—அவ்வுடலின் தொடர்பினாலாம்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்னும் ஐந்தினால் ஏற்படும் இன்ப துன்பங்களை, தின்று — அனுபவித்துக்கொண்டு.

நன்றாகப் பேசுவித்து நாடாந் திறப்பித்துச்
சென்றாச்சி-யூட்டுந் திருமுலைப்பா லுண்ணவைத்து
(247)

வாழவருள்வீ ரென்றுரைத்த மாற்றாந்தனைக் குறித்துத்
தாழ்வகலத் தோன்றுஞ் சடகோப னெம்பெருமான்
(248)

பரமபத நாதன் பரஞ்சோதி மூர்த்தி
பரவாசு தேவன் பரந்தாமத் தண்ணல் (249)

பத்துருவா யுற்பவித்தும் பாரோர் திருந்தாது
தத்துவத்தை விட்ட தவறனைத்துஞ் சிந்தைசெய்து
(250)

வேதத் தமிழை விரித்துரைக்க வேண்டுமெனப்
போதத் தரவைப் புளிக்கா வணமாக்கி (251)

அடியேனும் பட்டர்பிரா னாழ்வாரும் வெற்றிக்
கொடியாங் கருடனெனக் கூறும் படியாக்கி (252)

வாரணத்தைப் பொய்கை வனசப்பி ரானாக்கித்
தாரணி தண்டத்தைத் தமிழ்பூதத் தாராக்கிப் (253)

பேரான நாந்தகத்தைப் பேயாழ்வா ராக்குவித்துப்
போராழி யைமழிசைப் புத்தேளி ராக்குவித்து (254)

---

250 பத்துருவாய்—பத்தவதாரமாக.

251 'வேதத் தமிழை விரித்துரைக்க'
"வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர்"—(கண்ணி-தனியன்.)

254 நாந்தகம்—திருமாலின் வாள்.
நாந்தகஞ் சங்கு தண்டு (திவ் திரு. பெரி-4-1-2)
நாந்தக மின்னும் வீசி (கம்ப. அதி. 209)

நீலக்கட லளித்த நேமிச்சுரர் மானும்
கோலக் கவுத்துவத்தை கொல்லிக் பிறாயாக்கி (255)

ஆர்ந்தவன மாலிகையை யன்பர்தாட் டூளாக்கிச்
சேர்ந்த பறுவைத் திருப்பாணாழ் வாராக்கிக் (256)

சூரங்கணையா லொன்னார் குடர்பிடுங்கி மாலையிட்ட
சாரங்க வில்லைமங்கைத் தலைவர்பெரு மானாக்கித்
(257)

தேசத்தவரிற் சிறந்த சுர்ப்ப ரேகையுமாய்
................................................ (258)

மகவாசை யுங்களுக்கு மாற்றவந் தானல்லாற்
புகலேது முண்டோ? நீர் போமினெனச் சொன்ன
தற்பின் (259)

தாழ்ந்து வணங்கித் தவப்போத னாயாங்கள்
வாழ்ந்தோம் வாழ்ந்தோமிந்த மண்டலத்தில் வாழ்ந்
தோமே (260)

நம்பி யுரைத்ததுவும் நாங்கள் மறந்துவிட்டோம்
எம்பெருமா னீருரைக்க வின்று தெளிந்தோமே (261)

இப்போறு பெற்றவர்க ளெங்களைப் போலின்னமிந்த
முப்பே றுலகின் மொழியவொரு வருண்டோ? (262)

---

255 'நீலக்கட லளித்த'
'நீலக்கடல் கடைந்தாய்' (திருவா. 10—10—7)
நீலக்கடல் கோலமலர் (திரு. வா.)
,, கவுத்துவத்தை கொல்லிக்கிறையாக்கி—கவுத்துவத்தைக் குலசேகர ஆழ்வாராக அவதரிக்கச் செய்து.

256 வனமாலிகையை துளசி மாலையை.
,, அன்பர்தாள் தூளாக்கி—தொண்டரடிப்பொடி ஆழ்வாராக அவதரிக்கச் செய்து
,, மறுவை—ஸ்ரீவத்ஸத்தை திருப்பாணாழ்வாராகச் செய்து.

எட்மி லுயர்ந்தவரா? ரெம்மினுஞ் சீரியரார்?
இம்மண்ட லத்தவரி லென்றே மனந்தேறி (263)

தந்தையுந் தாயுந் தனையனென வெண்ணாமல்
முந்தை முதல்வனென முக்கால் வலஞ்செய்து (264)

சேவித்து நாமிச் செனனத்துன் முத்தருடன்
பாவித்தோ மென்றே பலகாலமும் பகர்ந்து (265)

முன்னைப் பழம்பொருளை மூவா முதலோனை
தன்னைத்தா னெப்பாம் தலைமகனைத் தத்துவனை (266)

எண்ணிரன் டாண்டு மெறும்பீக் கடியாமல்
கண்ணின் மணிபோலக் காத்திருந்தோங் காவலனே! (267)

ஐயா! வுனக்கே யடைக்கலமிப் பாலனெனக்
கையாம துரக விக்குக்காட் டிக்கொடுத்து (268)

திங்கண் மணிமார்பத் திருக்குரு கூரடைத்து
திங்கடொறுந் திங்கடொறுந் தென்குருகை மாநகரில் (269)

இந்து நுதன்மாது மிறைவர் பெருமானும்
வந்துவந்து போற்றி மதுரகவியைப் பணிந்து (270)

---

263 எம்மிலுயர்ந்த— எனக்கார் நிகர் இந்நானிலத்தே. (திரு.)

264 'தந்தையும் தாயும்'
'தஞ்சமாகிய தந்தை தாயொடு-
தானுமாயவை யல்லனாய், (திரு. 7—3—9.)

266 ',முன்னைப் பழம்பொருளை
மூவா முதலோனை''
முன்னைப் பழம்பொருட்கு முன்னைப்பழம் பொருளே''
(திருவா. திருவெம். 9.)
'மூவா முதல்வா இனியெம்மை' (திருவா. 2-10.)

நீர்செய்த பாககியமா நீணிலத்திற் செய்தவரார்?
பார்செய்த பாக்கியமாம் பாவலர்கள் கோமானை
(271)

இடைவிடா தாராதித் தேத்தினீ ரெங்கட்
குடையவர் நீ ரல்லா லொருவருண்டோ?
வென்றுரைத்து (272)

மீனமுதலாக முன்ன மேவுமவ தாரங்கள்
ஆனதெல்லாம் பரமாற னன்னார்க்குக் காண்பித்துச்
(273)

சேவைபிர சாதிக்கத் தரிசித்த வரிருக்க
ஆவதொரு கோயி லமைப்போ மினியென்ன (274)

பொற்கோயி லுண்டாக்கிப் பூசனைசெய் தண்டருக்கு
……………வீடுபெற்றார் (275)

காலங் குறித்திருக்குங் கண்ணர் பரந்தாமன்
ஞாலங் குறித்தேத்த நான்சொல்ல வேண்டுமென
(276)

வாரிதியி லுற்பவித்த வாரிசமங் கையுடன்
…… … … (277)

புள்ளசிற் றோன்றிப் பொலியமலர்க் கண்விழித்து
வள்ளமணி வாய்திறந்து மங்கலச்சொல் லாற்புகழச்
(278)

சிலைக்கோல நெற்றித் திருமாது கேள்வர்
இலைக்கோ ரொருவரா "யென்னைப்பா
வென்னைப்பா" (டு) (279)

என்னத் தமக்கேற்ற வெம்பெருமான் யாவரையும்
பன்னத் திருப்புளிக்கீழ்ப் பாடியுவப் பாக்குவித்து(280)

---

273 மீனம்—முதல் மச்சாவதாரம்.

277 வாரிதி—கடல். வாரிசமங்கை—இலக்குமி.

278 புள்ளரசு—கருடாழ்வார்.

அந்தாதி யாதி யதிகரிக்கும் பூதலத்தோர்
சிந்தாகுலந் தவிர்க்குந் தெய்வப் பிரபந்தத்தில் (281)

ஓராத சிந்தை யுலகத்துச் சப்பந்தஞ்
சேராமல் வேண்டுந் திருவிருத்த நூறும் (282)

பனுவெறெரி நீத்தார் பணிமாலின் குணங்கள்
அனுபவிக்கச் செய்த திரு வாசிரிய மேழும் (283)

அந்தஅனு பவத்தா லுண்டாமவா வெல்லாம்
முந்தவுரை யந்தாதி முத்தமிழெண் பந்தேழும்
(284)

தங்கும் வரவுக்குத் தகுதியா மீசுரனை
இங்கு வந்துசேர விசைத்திரு வாய்மொழியுள் (285)

ஏய்த்த வொன்றாம்பத்தி லிசையுமிரண் டாம்பத்தில்
"ஆய்ந்தடையத் தக்கா னருண்மாய்" னென்றதுவும்
(286)

திருத்தியமூன் றாம்பத்திற் செஞ்சொனா லாம்பத்தில்
அருத்தி யுயிர்நிலை யாம்படியே சொல்வதுவும் (287)

இயலுமைந் தாம்பத்தி லிசைவு மாறாம்பத்தில்
உயிரரிமையைச் சேர்தற் குபாய முரைத்ததுவும் (288)

---

281 சிந்தாகும்—மனத்தில் நிகழும் துன்பம்.

282 ஓராத சிந்தை—இடைவிடாத சிந்தனை

,, திருவிருத்தம் நூறும்—அகப்பொருட்டுறையமைந்த திருவிருத்தப் பாடல்கள் நூறும்.

283 பனுவல்—நூல்.

,, திருவாசிரியம் ஏழும்—ஏழுதிருவாசிரியப் பாடல்களும்.

284 முத்தமிழ்—இயல் இசை, நாடகம்.

,, அந்தாதி எண்பத்தேழும்—அந்தாதியாகிய எண்பத்தேழு பாடல்களும்.

திட்டுமே ழாம்பத்திற் சீர்திக ழெட் டாம்பத்தில்
வீட்டு வழிக்கு விரோ தமறக் கூறுவதும் (289)

தக்கவொன்ப தாம்பத்திற் சாற்றியபத் தாம்பத்தில்
மிக்கபல முண்டாகும் வித்தாரம் பேசுவதும் (290)

பண்ணமு தமுறப் பகர்ந்தவொண் றாம்பத்தில்
கண்ணனே காவற் கடவுளென்ற கட்டுரையும் (291)

சொல்லால் வகுத்துத் தொகுத்தவிரண் டாம்பத்தில்
எல்லார்க்கு மாலே யினியனென்ற கட்டுரையும் (292)

நாவின் மதுசுரக்கு நாட்டியமூன் றாம்பத்தில்
ஆவி நெடுமாலை யனுபவிக்கு மென்பதுவும் (293)

விரிதிரைநீர் மண்டலத்தில் வேட்டநா லாம்பத்தில்
அரிபிரிய மாக வடையுமுயி ரென்றதுவும் (294)

போதுதோறுந் தோன்றாப் புகழுமைந் தாம்பத்தில்
ஓது முபாய முயிர்க்கரியே றென்றதுவும் (295)

உய்யும் படிக்கே யுரைக்குமா றாம்பத்தில்
செய்யு முபாயந் தெரியும்வகை செப்புவதும் (296)

பெரும்புவி யோர்வாழப் பிறந்தவே ழாம்பத்தில்
விரும்புவதி லுண்டாம் விரோதநிலை செப்புவதும்
(297)

சந்ததமு மன்பா தரிக்குமெட் டாம்பத்தில்
அந்த விரோத மழியுமெனக் கூறுவதும் (298)

291 கட்டுரையும்—கட்டுரையே. (திருவா. 3-1.)

292 கட்டுரையும்—கட்டுளாக்கிய. (திருவா. 3-2.)

294 விரிதிரைநீர்—
விரிதிரைநீர் விண்ணகரம் மருவி நாளும் (திருநெடுந். 298.)

ஓதினால் முத்தி யுதவுமொன்ப தாம்பத்தில்
ஆதியா னாடோறு மாம்பலத்தைச் சொல்லுவதும் (299)

திவாகரனைப் போலுதயஞ் செய்தபத் தாம்பத்தில்
அவாவறுத்து வீட்டை யடைந்தமையே சொல்வதுவும் (300)

புகுமூர் நாதமுனி பூதூர் முனிவன்
தகுமூர் நமக்கிவையே தானெனச் சிந்திப்பான் (301)

மட்டோ லிருந்தாழ் மாறனரு ளிச்செயலைப்
பட்டோலை யிட்டபிரான் பட்டோலை கொண்ட
தெல்லாம் (302)

நீணிலத்தி னின்றதற்பி நேமித் திருக்கரத்தான்
சேணிலத்தி னின்றுந் திரும்பி யெழுந்தருளி (303)

முப்பத்து முக்கோடி தேவர் முனிவர்குழாம்
எப்பத்தி தோறு மிறைஞ்சவெதிர் தோன்றினான் (304)

திருவாணை யுடனே நின்றிருவாணை கண்டாய்
திருவாய் பரமபதந் தந்தொழியப் போகேல் (305)

அமலா வெனமறிக்க வச்சுதா னந்த
கமலா சனனே! கடல்ஞால மெல்லாம் (306)

---

300 'அவாவறுத்து வீட்டை அடைந்தமை'
''அவாவற்று வீடுபெற்று குருகூர்ச் சடகோபன் சொன்ன''

302 ''பட்டோலை யிட்டபிரான்—மதுரகவி ஆழ்வார்
பட்டோலை கொண்டது'.
பெரியோர் கூறியதை எழுதல்; இங்கு நம்மாழ்வார்
அருளியதை மதுரகவியார் திருக்கரம் பொறிந்த செய்தியைக்
குறித்ததாகும்.

305 ''திருவாணை யுடனே நின்
திருவாணை கண்டாய்''
''வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை
நின்னாணை கண்டாய்'' (திருவா. 10-2.)

இன்னம் பிறந்திறந்தா லீடேற்ற முண்டாமோ?
உன்னன் பர்க்கே யுதவும் பொருட்டாகப் (307)

பொய்கை முதலானோர் புகன்றதுவு நீரருளிச்
செய்ததுவும் பின்னோர் தெரிந்துரைக்கும் பாடல்களும்
(308)

பண்பா லுபதேசம் பண்ணுமெனப் பூமாதை
நண்பா வடியேற்கும் நாடுபிடி யாதென்னக் (309)

கண்ட மதுரகவி காரிமா றாவென்னையுங்
கொண்டகன் றானையேன் குறைமுடியு மென்றுரைத்த
(310)

மெய்யன்ப னைநோக்கி மேதினியி லுள்ளோர்க்கு
......... ......... ......... (311)

அந்தரங்க முண்டோ வகிலத்தில் வாழ்திமேன்
எந்தை பெருமானே! யிருக்கமுடி யாதென்றான் (312)

வாழ்வான தண்டுழாய் மாலை பொலிந்துநின்றார்
ஆழ்வார்கள் கோமானே ! யாதரித்துன் பாலடைந்த
(313)

இந்த மதுரகவி யேங்கிக் கரைந்துருகி
வந்து தடுமாறி மனமுகந்த வண்ணமே (314)

இத்தலத்தில் வாழ்ந்தருளு மின்றுமுத லும்மடியேன்
நித்தியமா கிப்பொலிந்து நிற்போ மெனவாழி (315)

நாரணனா திப்பிரா னட்டுப்ப டிதிருந்தி
ஆரணமுத் தமிழோ ராயிரமும் பாடவல்லான் (316)

மதுரகவி சிந்தை மருளாத வாறே
சதிரமுக மலர்ந்து தண்ணளியா னோக்கு (317)

நாமுமக்குத் தஞ்ச நமக்குநீ யேயுலகில்
ஆமுதல்வ னென்றே யபயத்தஞ் செய்தருளி (318)

முன்கங்கை யின்பால் முழுச்சுடராய்க் கண்டதிலும்
பின்பதி னாறு பிராயந் தொழுததிலும் (319)

பேராசை மிக்காகிப் பேரா யிரமுடைய
நாராயணன் நமக்கிவனே தெய்வ மென (320)

மஞ்சன நீராட்டி மலரா லருச்சித்துத்
தஞ்சமடி யேற்குச் சரணார விந்தமென (321)

நாவுக் கமுதூற நாலுகவிப் புலவோர்
பாவுக் கணியாம் பரமபதப் பாட்டும் (322)

முன்னாழ்வார் நால்வர் மொழிந்த திருமொழியும்
பின்னாழ்வா ரோரைவர் பேசுந் திருமொழியும் (323)

திருவாய் மொழியுஞ் செகத்துளோ ருக்கோதி
இருநூற்று நாற்பதாண் டிங்கிருந்து வாழ்ந்தருளி
(324)

318 'ஆமுதல்வ னென்றே'
'நாவுக்கமுதூற'
'அண்ணிக் குமமு தூறுமென்னாவுக்கே' என்னும் பாசுரக் கருத்தையுட்கொண்டு நின்றது.

,, நாலுகவிப் புலவோர்—திருமங்கையாழ்வார்.

323 முன்னாழ்வார். நால்வர்—பொய்கையாழ்வார். பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார்.
பின்னாழ்வார் ஓரைவர்—குலசேகரப்பெருமாள், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார்.

324 "இருநூற்று நாற்பதாண் டிங்கிருந்து வாழ்ந்தருளி"
இருநூற்று நாற்பது ஆண்டுகள் எடுத்த உடலுடன் யோகவாழ விலிருந்தருளி" இச்செய்தி குருபரம்பரை முதலிய முந்து நூற்களிற் காணப் பெறாததாகும்.

உற்பவித்த சென்மத் துடலோடும் வைகுந்த
பொற்பதியி லேகிநித்தர் புத்தேளி ரேயாகி (325)

இருந்தருளு மாற லிவனோ பரனென்ன
வருந்திண் மாட்டாக மவுனித் திருப்பதே (326)

சீராகு மென்றேதிருப் புளிக்கீழ் வீற்றிருந்தோன்
நாரா யணனாதி நாத னரவணையான் (327)

வைகுந்த வானாட்டில் வாழச் சுதானந்தன்
வைகுந்த வூரில் மறைத்ததமிழ்நூல் வந்தகனால் (328)

மண்ணினார் தங்கடங்கள் வாக்கினா லுச்சரியார்
எண்ணிநினை யார்நினைந்தா லியாமிறப்போ
மென்றேங்க (329)

அத்தன்மை யாலிறந்த தாரணநா லாயிரமும்
பத்தருக்கு முன்போலப் பாலிக்க வேண்டுமென (330)

வந்தசேனை சுதிபர் வாசற் கரிமுகருஞ்
சுந்தரத்தோண் மன்னனார் தொண்டரடித்
தொண்டரகி (331)

ஞானியர்கள் தீபமெனு நாதமழை மேகம்
ஆனிமா சத்தி னுடைத் திருநாளில் (332)

மின்னவிரும் பொன்மதிள்சூழ் வீரநா ராயணமாம்
நன்னகரிற் சீரங்க நாதனெனத் தோன்றி (333)

ஆதிமுதல் நாதமுனி யாகிநெடு மாமால்
பதிகடொறுஞ் சென்று பணிந்தொழுகு மன்னாளில்
(334)

ஆராவ முதுவந்த வாராவ முதுபத்தும்
மோராயிரத்துக் குறைமோ ரிதாமி தென்று (335)

---

333 'வீரநாராயணம்' என்பது காட்டுமன்னார்கோவில் நாதமுனிகள் அவதாரத் தலம்.

335 'ஆரா வமுது வந்த ஆரா வமுத பத்தும்'
'ஆரா வமுதே யடியேனுடலம்' (திருவா. 5-8-1)
ஆரா வமுதா யடியேன்' (திருவா. 5-8-10)

மால்வடிவாய்த் தோன்றும் வைணவர்கள் பாலோதி
நால்வடிவாய் வேத நுவலுங் குருகூரன் (336)

சந்நிதியி லேகிச் சதுரன் மதுரகவி
சொன்னபத்துப் பாட்டுமவன் றொண்டருப தேசிக்க
(337)

நூலாகி யகண்ணி நுண்சிறுத்தாம் பாதியாய்
மேலாக வன்பவரை விண்ணப்பஞ் செய்துசெய்து (338)

நன்னீர்த் திருப்புளிக்கீழ் நாற்பது நாளிருந்து
பன்னீரா யிரமுருவாய்ப் பத்தியுட னுச்சரிக்க (339)

மன்முன்னே செய்திருந்த மாதவத்தோ னாதமுனி
கண்முன்னே வந்துன் கருத்தே தெனக்கேட்கப் (340)

பேர்ப்பரத்து நாவீறு பெற்றுமகிழ் முச்சுடரை
கூர்த்த பரத்துவத்தாற் கூறுமோ ராயிரமும் (341)

ஒன்பதின்ம ராங்கி யுரைத்தஏழு வாயிரமும்
என்பரமே! சுட்டுரையு மென்றிருபா தத்திறைஞ்ச
(342)

நாலாயி ரந்தமிழு நாதமுனிக் குப்பகர்ந்து
மாலாழி சங்கெழுதி மந்திரமோ ரெட்டெழுத்துஞ்
(343)

---

337 மதுரகவி சொன்ன பத்துப்பாட்டு
'கண்ணிநுண் சிறுத்தாம்பினால்' என்னும் தொடக்கத்தை
யுடைய பத்துப் பாசுரங்கள்

339 'திருப்புளிக்கீழ் நாற்பது நாளிருந்து
பன்னீராயிரம் உருவாய் பத்தியுடனுச்சரிக்க'
நாதமுனிகள் திருப்புளியின்கீழ் நாற்பது நாளிருந்து பன்னீ
ராயிரந்தடவை பத்தியுடன் நம்மாழ்வாரைத் துதித்தார்,

341 'பேர்த்து நாவீறு பெற்று'
'பேர்த்து மற்றோர் களைகண்' (திருவா 6-9)

சித்திரையானுக் குபதேசித் தருள் புரிந்து
முத்திரைக்கை மோன முனிவனாட் கொண்டருள (344)

அத்தால்வெளி யிட்டருளு மிந்தப்பா டல்முற்றும்
இத்தார ஸரியோ ரினியுரைக்க நேசித்தால் (345)

நாமுள்ள நாளெல்லாந் தத்துவஞா னஞ்சிறந்து
பூமுதல் வன்றீட்டும் பொறிபழுது வாராமற் (346)

செல்வத்த ராகித் திருநாட் டிறையாக
நல்வரத்தை நல்குமென நங்கைகுமா ரன்கருணை (347)

மாரிமா றாது மகிழ்ந்து வரங்கொடுக்க
வாரிமா தேபுவியில் வாழ்ந்ததென வாழ்ந்தனனே (348)

தன்னின் மனமகிழ்ந்து தன்னிலே பூரித்து
நன்னிலய னாகிநின்ற நாதமுனிவன் வாழி (349)

வாழி குருகூரன் வாழிதிருக் கோளூரன்
வாழி பெரும்பூதூரன் வாழியென வாழ்ந்தனனே (350)

## ஆழ்வார் திருத்தாலாட்டு முற்றும்

திருஞானமுத்திரைத் தேசிகன் திருவடிகளே சரணம்.



---

350 திருக்கோளூரன் - மதுரகவியாழ்வார்
,, பெரும்பூதூரன்—உடையவர்.

ஸ்ரீ:

# நம்மாழ்வார் திருத்தாலாட்டு

## பாடல் முதற்குறிப்பு அகராதி



ஸ்ரீ:

# நம்மாழ்வார் திருத்தாலாட்டு

## அருந்தொடகராதி

